# TRUE LOVE

OR

# SUNDARI

A TAMIL DRAMA

BY

**Rao Saheb P. SAMBANDAM, B. A., B. L.**

Author of:

"The Two Sisters," "The Bandit Chief," "Sabapathy," "Manohara," "Blind Ambition," "The Demon Land," "Fate and Love" "Sarangadhara," "Simhalanatha," "Pushpavalli," "Amaladitya," "Magapathi," "Galava," "The Two Friends," "The Golden Fetters," "Farces," "Siruthondar," "Markandeya," "The Fair Ghost," "The Merchant of Vanipura," "The Wedding of Valli," "The Eye of Love," "Vijayarangam," "As you like it," "Ratnavali," "Lord Buddha," "The Tragedy of Silence," "The Good Fairy," "Geetha Manjari," "Harischandra," "As We Sow-So We Reap," "The Curse of Oorvasi," etc. in Tamil, and "Harischandra," and "Yayathi" in English.

**SECOND EDITION**

Madras:

PRINTED BY DOWDEN AND CO., AT THE "PEERLESS PRESS,"

21, Sunkurama Chetty Street.

1923.





(Price per Copy As. [illegible]-0

உ

# மெய்க்காதல்

இந்த தமிழ் நாடகம்

ராவ் சாஹெப்

**ப. சம்பந்த முதலியார், பி-ஏ., பி-எல்.,**

அவர்களால் இயற்றப்பட்டது.

(இந்த நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்ற நூல்கள் :—
"லீலாவதி சுலோசனை," "கள்வர் தலைவன்," "மனோஹரன்," "இரண்டு நண்பர்கள்," "சாரங்கதரன்," "வேதாள உலகம்," "சத்ருஜித்," "யயாதி," "காலவரிஷி," "அமலாதித்யன்," "காதலர் கண்கள்," "பேயல்ல-பெண்மணியே," "மகபதி," "மார்க்கண்டேயர்" "பொன் விலங்குகள்," "சிம்ஹளநாதன்," "விரும்பிய விதமே," "சிறுத்தொண்டர்," "நற்குல தெய்வம்," "வாணீபுர வணிகன்," "ரஜபுத்ரவீரன்," "ஹரிச்சந்திரன்," "ரத்னவளி," "புஷ்பவல்லி," "கீதமஞ்சரி," "சபாபதி," "பிரஹசனங்கள்," "ஊர்வசியின் சாபம்," "விஜயரங்கம்," "முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும்," "வள்ளி மணம்," "புத்த அவதாரம்" முதலியன.) :: :: :: :: ::

இரண்டாம் பதிப்பு




சென்னை :
டேடன் கம்பெனியாரின்
"பியர்லெஸ்" அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1923.

 [விலை அணா 12-8-0

INSCRIBED

TO

THE BELOVED MEMORY OF

**MY PARENTS**

P. VIJIARANGA MUDALIAR,

and

P. MANICKAVELU AMMAL

" At the feet of thy Parents lies Paradise "

*After Mahomet.*

## Preface to the First Edition

This was written by me as early as 1892, and the first public performance given by the Suguna Vilasa Sabha was, of this drama, in 1893. From that time forward till very recently, I paid no attention whatever to this early work of my pen. Some time ago, I casually came across the manuscript of this drama, and out of mere curiosity, I went through it. It was a peculiar sensation to read what I wrote twenty-two years ago. It interested me, and feeling that it might also interest my readers, I was led to print it. My reason for printing this drama, has induced me to print it exactly as I wrote it years back, without any alteration whatever, though if I had to re-write the drama, I should like to make many changes therein. I give this to my readers, as the work of my 'apprentice hand', in the hope that they will find it not altogether devoid of beauty as a work of art.

"PAMMAL LODGE"
MADRAS
15th Nov. 1914.

THE AUTHOR.

## Preface to the Second Edition

I would like to draw the attention of all concerned that previous permission must be obtained before any body stages this or any other drama written by me, and that I charge a Royalty for each performance of my dramas.

"PAMMAL LODGE"
MADRAS
20th February 1923.

THE AUTHOR.

# மெய்க்காதல்



## நாடக பாத்திரங்கள்

| | |
|---|---|
| ஜெயந்தன் ... ... ... | விதர்ப்பதேசத்து அரசன் |
| வீரசேனன் .. ... ... | கோசலநாட்டு அரசன் |
| அதிரூபன் ... ... ... ... | ஜெயந்தனுடைய குமாரன் |
| சத்யவந்தன் ... ... ... | அதிரூபனுடைய தோழன் |
| மித்திரவசு ... ... ... | சாளுவநாட்டு அரச குமாரன் |
| வீரமார்த்தாண்டன் ... ... | வீரசேனனுடைய சேனாதிபதி |
| சுவிசாரி, மதியூகி ... ... ... | வீரசேனனுடைய மந்திரிகள் |
| வசுமதி ... ... ... ... | ஜெயந்தனுடைய மனைவி |
| சுந்தரி ... ... ... ... | வீரசேனனுடைய பெண் |
| சாகரிகை ... ... ... | சுந்தரியின் தோழி |
| லலிதை ... ... ... ... | வசுமதியின் தோழி |

விதூஷகன், ஓர் புரோஹிதர், ஓர் குறத்தி, சேவகர்கள், போர்வீரர்கள், வேடர்சள், கொத்தவால், சிறைக் காவலாளிகள் முதலியோர்.

# மெய்க்காதல்



## முதல் அங்கம்

### முதல் காட்சி

இடம்—ஜெயந்தன் அரண்மனையில் ஓர் மண்டபம்.

ஜெயந்தனும் வசுமதியும் ஆசனத்தில் வீற்றிருக்கிறார்கள்.

லலிதை முதலிய தாதியர் உபசாரம்செய்துகொண்டிருக்கிறார்கள்.

ஜெ. வசுமதி, நான் ராஜதானியை விட்டுச் சென்று தேச சஞ்சாரஞ் செய்யத் தொடங்கியது முதல், இதுவரையில், சற்றேறக்குறைய ஆறு மாதங்களாய்விட்டன பார்த்தாயா? இவ்வாறு மாதங்களாக நீ சங்கீதம் கற்று வருவதாகக் கேள்விப்பட்டேன். மிகவும் சந்தோஷம், வசுமதி, ஏதோ, நான் சற்று கேட்கவேண்டும்.

வ. உத்தரவு, பிராணநாதா. லலிதா, என் வீணையை எடு.

[லலிதை வீணையை எடுத்துக் கொடுக்கிறாள்.]

ஜெ. அதிரூபனும் சத்யவந்தனும் எங்கே? லலிதா, நீ சென்று நான் அவர்களை அழைப்பதாகச் சொல்.

ல. அப்படியே, மஹாராஜா.

லலிதை வெளியிற் சென்று, சத்யவந்தனை அழைத்துக்கொண்டு மறுபடியும் வருகிறாள்.

ச. மஹாராஜா, நமஸ்காரம். அம்மா, நமஸ்காரம்.

ஜெ. சத்யவந்தா, உன் தோழனெங்கே?

ச. மஹாராஜா, நாங்க ளிருவரும் தாங்கள் அழைப்பதாக வறிந்து இங்கு வரும்போது, இளவரசர் நமது ஆசார வாசலில் குடிகள் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டு, என் னென்று விசாரிக்கப் போனர். இதோ வந்துவிடுவதாகச் சொன்னர்.

ஜே. சத்யவந்தா, உட்கார், ஏன் நிற்கிருய்?

[வசுமதி வீணை வாசிக்கிருள்.]

அதிரூபன் வருகிருன்.

அதிரூபா, என்ன விசேஷம்.

அ. தந்தையே, நமது ஆசாரவாசலில் அனேகங் குடிகள் வந் திருப்பதாகக் கேள்விப்பட்டு, அங்கு சென்று விசாரிக்க, முறைப்படி செய்யவேண்டிய வனவேட்டை, தாங்கள் தேச சஞ்சாரம் செய்தபடியால் தவறிப் போயினபடி யால், வனவிலங்குகள் அதிகப்பட்டுத் தமது பயிர் முத லியவைகளை யெல்லாம் கெடுக்கத் தொடங்குகின்றன என முறையிட்டார்கள்.

ஜே. குழந்தாய், அப்படியா?—ஆம், உண்மைதான். நான் வன வேட்டையாடி நெடுநா ளாயது, சீக்கிரம் வேட்டை யாடச் செல்லவேண்டும்,—ஆயினும், எனக்கோ வரவர மூப்பு அதிகரித்துக் கொண்டே வருகிறது. எனக்கு வேட்டையில் முன்பிருந்த உற்சாக மிப்போ தில்லை. குழந்தாய், அதிரூபா, நீ சென்று வேட்டையாடி வரு கிருயா?

அ. ஐயனே, அதைக் கேட்கவே நான் இங்கு வந்தேன். தேவரீர் இப்போது தேச சஞ்சாரஞ் செய்து வந்தமை யால் மிகவும் மெலிவடைந்திருக்கிறீர், ஆதலால் எனக்கு விடை யளிப்பீராயின் நான் சென்று காட்டு மிருகங்களை ஹதஞ் செய்து வருகிறேன்.

வ. பிராணநாதா, இவன் அறியாக் குழந்தையாச்சே! இவ னையோ காட்டிற்கு வேட்டையாட அனுப்புவது?

ஜே. ஆம் கண்மணியே, நீயோ அறியாப் பாலகன். காட்டிற் சென்று வேட்டையாடுவதென்றால் எளிதன்று உனக்கு வன விலங்குகளால் ஏதாவது தீங்கு நேரிடின் நான் எவ்வாறு சகிப்பேன்? ஆதலால், நமது சைனியங்களை உன்னுடன் அழைத்துச் செல்வாய்.

வ. அப்படியாவது செய்யட்டும்.

அ. ஐயோ! நான் அவ்வாறு சேனைகளுடன் செல்வேனாயின் வேட்டையாடுவதினா லுண்டாகும் சுகங்களில் ஒன்றையும் அனுபவிக்கமாட்டேனே.

வ. இல்லாவிட்டால் நீ வேட்டைக்குப் போகவேண்டியதில்லை.

ஜே. இல்லை இல்லை. எனக்குஞ் சஞ்சலமா யிருக்கிறது. அவ்வாறுதான் நீ செய்யவேண்டும்.

அ. ஐயனே, இந்த ஒரு வரம் மாத்திரம் எனக்குத் தாங்கள் அருள வேண்டும். வேண்டுமென்றால் நமது ராஜாங்கத்து வேடர்களை மாத்திரம் என்னுடன் அழைத்துச் செல்கிறேன். தன்னுடைய உயிரைப் பார்க்கிலும் மேலாக என்னை மதிக்கிற எனது நண்பனாகிய சத்யவந்தன் என்னுடன் வரப்போகிறான். அவனைப் பார்க்கிலும் வேறென்ன எனக்குத் துணைவேண்டும்?

ஜே. ஆம் சரிதான், சீக்கிரத்தில் வேட்டையாடி வருவாய். அப்பா, சத்யவந்தா, என்னுடைய குமாரனை உன்னிடம் ஒப்புவித்தேன். அவனுக்கு ஒரு தீங்கும் வாராமல் நீதான் காத்துக் கொள்ளவேண்டும். நீ என்னுடையகுமாரனுடன் செல்லும்போது அவனுக்கு என்ன தீங்கு நேரிடப் போகிறது?

வ. சத்யவந்தா, நீ தான் எனக்கு அதிரூபனைச் சீக்கிரத்தில் ஒப்புவிக்கவேண்டும்.

ச. அம்மணி, அப்படியே; மஹாராஜா, எனது நேயனுக்கு ஒரு தீங்கும் வராமல் பாதுகாத்துக்கொள்வது என்

னுடைய கடமையாம். தெய்வாதீனத்தால் அப்படி ஏதாவது தீங்கு நேரிடுமாயின் எனக்குப் பிற்காலம் அது நேரிடுமென்று தாங்கள் ஸ்திரமாக நம்பலாம்.

ஜெ. அப்படி யொன்றும் வராதென்றே நினைக்கிறேன். குழந்தைகளே, சுகமாகப் போய் வருவீர்களாக. ஜாக்கிரதை, சீக்கிரம் வரவேண்டும். நீங்கள் வருமளவும் ஒரு க்ஷணம் ஒரு யுகமாகவே எனக்குக் கழியும்—ஜாக்கிரதை!

வ. ஜாக்கிரதை, ஜாக்கிரதை! சீக்கிரம் வரவேண்டும்.

அ. அப்படியே, நாங்கள் போய் வருகிறோம்.

ச. [போகும்போது] ஐயனே, நமது வேடர்களை யெல்லாம் ஆயத்தமா யிருக்கும்படிச் சொல்லிவிட்டீரா?

அ. இல்லை இல்லை, சத்யவந்தா, நீபோய் சொல்லிவிட்டுவா.

காட்சி முடிகிறது.

---

## இரண்டாம் காட்சி

இடம்—ஓர் காடு.

திண்ணன், காடன், நாணன் புலியன், இருளன் முதலியோர் வேட்டை நாய்களுடனும் வலை முதலியவைகளுடனும் வருகிறார்கள்.

தி. அடே! ராஜ குமாரர் முதலிய எல்லோரும் வேட்டையாடுகிறார்கள். சீக்கிரம் வாருங்கள். மிருந்த வலைகளை யெல்லா மெடுத்துக்கொண்டு போவோம்.

மற்றவர். இதோ வந்தூட்டோஞ் சாமி, இதோ வந்தூட்டோம்.

[திண்ணன் போகிறான்.]

அடே காடங்! நாணங்! இருளாங்! புளியாங்! சீக்கிரம் வாங்கடா. அதோ ஓடுது, ஓடுதடா புளி! வலையே யெடுத்துக்கொடாங். அதோ ஓடுது பாருடா பண்ணி! பண்ணி! கொல்லுடா கொல்லு! அடி அடி!

[என்று கூவிக்கொண்டு போகிறார்கள்.]

அதிநுபனும் சத்யவந்தனும் வருகிறார்கள்.

ச. அரசே, நாம் இன்று வேட்டையாடியது போதும். இக் காட்டு மிருகங்க ளெல்லாம் ஹதமாய் விட்டன. நாம் நம்முடைய பட்டணத்திற்குத் திரும்பிச் செல்வோம்.

அ. சற்றுப் பொறு சத்யவந்தா, இன்னும் ஏதாவது மிருகம் இருக்கிறதா எனப் பார்ப்போம்—அதோ பார்த்தாயா! அதோ பார்த்தாயா! காட்டுப் பன்றி! சத்யவந்தா! எப் படியாவது அதோ ஓடுகின்ற காட்டுப் பன்றியைக் கொன்றுவிட்டே நாம் திரும்பவேண்டும்.

ச. ஐயனே! பன்றியோ இதற்குள்ளாக நெடுந்தூரம் சென்று விட்டது. நாம் இனி அதைப் பிடிப்பது மிகவுங் கடினம்.

அ. அப்படி யல்ல! எதோ பார்ப்போம், சீக்கிரம் வா.

[இருவரும் விரைந்து போகின் றனர்.]

காடன், புலியன், இருளன், நாணன் மறுபடி வருகிறார்கள்.

கா. ஆ! ஆ! அடே! நாணுங்! இருளாங்! இந்த பச்சிங்களெ யெல்லாம் ஒண்ணு புடிச்சி வையுங்கோடா!

இ. அடே! புலியாங்! நாம்போ இண்ணைக்கி ஆடனது நல்ல வேட்டேடா!

கா. ஆமாண்டா! ஆமாண்டா!

பு. அடே! காடாங்! இண்ணைக்கி எத்தினி புளிடா கொண்ணே?

கா. போடா! இண்ணைக்கி ஒண்ணுதாண்டா ஆப்புடுச்சி.

நா. புளியா! புளியா! நா றெண்டு புளி கொண்ணேண்டா, இண்ணக்கி!

இ. போடாபோ! பொய் பேசறு இவன், பொதார்லே பதுங்கிகிண்ணு இந்தா! இவெ னெண்டு புளி கொண் ணுை!

நா. ஊங் சென்னடா தெரிஞ்சிச்சி? அங்கே ஒளிச்சிகினே இருந்தேனு, நெண்டு புளி மொள்ள வந்திச்சி, சட்டிண்ணு இந்த ஈட்டியாலே நெண்டையு ஒரே குத்தா குத்திட்டே, குத்திட்டு அப்படித் திரும்பினே, இந்த பக்க நெண்டு புலிங்க வந்திச்சி, அத்தையு ஒரே குத்தா குத்திட்டே.—

இ. அடே! நெண்டு புலிங்க இண்ணு சென்னயே, இப்போ நாலு எப்படிடா வந்திச்சி?

நா. போடா! ஊங்கென்னடா தெரிஞ்சிச்சி? நான்தா சொல்ரேனே! அப்பறம் என்ன செய்தே, இந்த எட்டு புலியையு தூக்கி தோள்மேலே போட்டுகினே—

கா. அடே! நெண்டு புளி எட்டு புளி ஆய்பூடிச்சோடோ இதுக் குள்ளோ!—அதிருக்கட்டும் எங்கே அந்த புளிங்க?

நா. கேள்ரா செல்ரே, இதுக்குள்ளே அவசர இவனுக்கு. இந்த பன்னெண்டு புளிங்களேயும் தூக்கமுடியாதே என்னலே—கொஞ்சந்தூர தூக்கினே வந்தே, அப்புறம் அதோ ஆறு இர்க்குதே அதிலே, ஒவ்வொண்ணு இந்த பதினறு புளியையு போட்டிட்டே.

பு. போடா! போடா! போடா! இவென் பொய் பேசுறு. முன்னே நெண்டுபுளி இண்ணு, அப்புற பதனறு புளியாம்! போடா! இவனெ நம்பக்கூடாதுடா.

மற்றவர். ஆமாண்டா! ஆமாண்டா!

திண்ணன் மறுபடியும் வருகிருன்.

தி. அடே!

வே. தண்டம் சாமி, தண்டம்!

தி. எல்லோரும் ராஜ குமாரனைத் தேடிக்கொண் டிருக்கிருர்கள், துஷ்டப் பயல்களே! இங்கே உட்சார்ந்துகொண்டு கூச்சலிட்டுக் கொண்டா இருக்கிறீர்கள்!

மற்றவர். இல்லே சாமி, இல்லே சாமி.

தி. என்ன இல்லே? இளவரச ரெங்கே?

கா. அது என்ஞசாமி? எளரசு—எங்கு தெரியாது சாமி!

தி. அடே! அதிரூப ரெங்கேயடா?

நா. என்னது? டேயப்பா! எது? எது?

தி. கழுதைகளே! ராசாவின் பிள்ளை எங்கே?

கா. ராசா குட்டியா? அந்த எப்வே முன்னெ சொல்லி அழ ரதுதானே, சொம்மா கோவிச்சிஞகா—ராசா குட்டியா?

தி. ஒழிந்தது, ராஜா குட்டிதான், சொல், யாராவது பார்த்தீர்களா?

கா. ராஜாகுட்டி சாமி! பண்ணி சாமி இல்லே, காட்டுப் பண்ணி, அத்தே தொறத்திகிணு போச்சி சாமி.

தி. எப்பொழுது?

நா. இப்போதாஞ் சாமி, கொஞ்ச மின்னே.

தி. நீங்கள் ஏன் பின்னல் போகவில்லே? ராஜகுமாரனுடன் யார் சென்றது?

கா. அல்லாசாமி, ராஜ குட்டியோட, யின்ஞெண்ணு வந்திச்சே, அது போச்சி சாமி! ரெண்டு பேரு அந்த பண்ணி பின்னலே ஓடிச்சி.

நா. ஆமாஞ் சாமி, நாங்கூட பாத்தேன்.

தி. சரி! ஆனல் நாமெல்லாந் தேடிச் செல்வோம் வாருங்கள்; எப்படியும் இருட்டுவதற்கு முன்பாக நாம் ராஜ குமாரனைக் கண்டு பிடிக்கவேண்டும்.

[எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

## மூன்றாம் காட்சி

இடம்—வீரசேனன் அரண்மனையைச் சார்ந்த பூம்பொழில்.

அதிநுபன் சத்யவந்தன் வருகிறார்கள்.

அ. சத்யவந்தா, பிதா நம்மை யெப்படியுங் கடிந்து கொள்வா ரென்பதற்குச் சந்தேக மில்லை. நாம் எப்படி நம்முடைய பட்டணத்திற்குத் திரும்பிச் செல்வது? நாம் இப் பொழுது எங்கே யிருக்கிறோம் தெரியுமா?

ச. அரசே, எனக் கொன்றுந் தோன்ற வில்லை, அப் பன்றியைத் துரத்திக்கொண்டு அனேக காத தூரம் நாம் வந்திருக்கவேண்டும்; நமது நாட்டெல்லையை விட்டு நாம் வந்திருக்கிறாற் போலத் தோன்றுகிறது எனக்கு.

அ. ஆம் தோழா, எனக்கு மப்படியேதான் தோன்றுகிறது. நாமிப்பொழுது வந்திருப்பது நமது தேசத்திற்கு அயலி லுள்ள ஓர் நாடாகவே யிருக்கவேண்டும்—சத்யவந்தா, இச் சோலையைக் கண்டாயா! எவ்வளவு இனிமையாக விருக்கிறது! ஓர் அரசனுடைய நந்தவனத்தைப்போ லல் லவோ தோன்றுகிறது.

ச. ஆம் ஆம், மிகவும் நன்றாகவே யிருக்கிறது.

அ. அப்பா! என்ன குளிர்ச்சியாகத் தென்றல் வீசுகிறது. தோழனே, நாம் இங்கு சற்று களைப்பாறி, பின்பு நமது தேசத்திற்குச் செல்ல வழி தேடுவோம். அப் பன்றியின் பின்னே ஓடி வந்ததனால் எனது காலெல்லாம் நோவு கிறது.

ச. அப்படி ஓடியும் அதைப் பிடிக்கவில்லையே.

அ. அதற்கு நாமென்ன செய்யலாம். நம்மா லியன்ற வளவு முயன்றோம்.—தோழா, இப் புஷ்பச் செடிகளெல்லாம் இப்பொழுதுதான் மலரத் தொடங்குகின்றன கண் டாயா?

ச. ஆம் ஆம், சாயங்கால மாய்விட்டதல்லவா? அரசே நாம் சூரியன் அஸ்தமிப்பதற்குமுன் இதோ அருகாமை

யிற் றேனும்படியான நகரிற் சென்று நமது பட்டணத் திற்கு வழி யறிந்து செல்லவேண்டும். போவோம் வாரும்.

அ. நண்பா, இன்றைக்கு நெடுநேர மாகிவிட்டது. நாம் இவ் விடத்தில் இன்றிரவு தங்கி, நாளைத்தினங் காலையில் செல்லலாகாதா ?

ச. ஐயனே, நா மப்படிச் செய்வோமாகில் மஹாராஜா நம் மீது மிகவுங் கோபித்துக் கொள்வார். நம்மை மிகவுஞ் சீக்கிரத்தில் வரும்படிக் கட்டளை யிட்டதை மறந்து விட் டீரோ ? அதுவு மன்றி இன்றிரவில் இப் பட்டணத்தில் நாம் எங்கு தங்கியிருப்பது ?

அ. ஏன் ? பட்டணமென்றால் சத்திரங்கள் முதலியன இல்லா மலா யிருக்கும் ? அவற்று ளொன்றில் இன் றிரவைக் கழித்தாற் போகிறது.

ச. அரசே, நாமப்படி செய்தல் நம தந்தஸ்திற் கேற்ற தன்று ; எப்படியும் நம்மை இன்னாரெனக் கண்டு பிடித்து விடுவார்கள்.

அ. என்ன ! நாம் இன்னாரென்று கூறிவிட்டால் இப் பட்ட ணத்து ஜனங்கள் எவ்வாறு நம்மைக் கண்டு பிடிப்பார் கள் ?

ச. ஐயனே, நாம் கூறிவிட்டாலும் நம்முடைய நடையுடை பாவனைகளே நம்மை இன்னாரென்று வெளியாக்கி விடு மென்பதற் கைய மில்லை

அ. அப்படியா ? ஆனால் நம்முடைய சிறந்த ஆடை யாபர ணங்களை யெல்லாம் கழற்றிவிட்டுச் சாதாரண ஜனங் களைப்போ லிருப்போம்; இதற்கென்ன சொல்லுகிறாய் ?

ச. அரசே, எப்படி யிருந்தபோதிலும் நா மின்னாரென்று வெளியாகிவிடும்.

அ. என்ன சத்யவந்தா ? நாமே கூறிவிட்டால் ஒருகாலும் வெளியாகாது.

ச. என்னைத் தங்களுக்கு மாருகக் கூறுவதற்காக மன்னிக்க வேண்டும்; நா னவ்வாறு நினைக்க வில்லை.

அ. எதோ பார்ப்போம், நண்பனே, இன்று முதல் ஒரு மாதம் வரையில் நா மின்னுரென்று ஒருவரிடமும் கூறலாகாது. எப்படி நம்மை இன்னுரென்று கண்டு பிடிக்கிருர்களோ பார்ப்போம்.

ச. ஐயனே, அவ்வா றிருப்பது மிகவுங் கடினம்.

அ. என்ன சத்யவந்தா! நாம் ஒரு பிரதிக்ஞை செய்துகொண்டால் அதன்படி நடவாமற் போவோமா? என்னதான் நேரிட்டபோதிலும் இப் பிரதிக்ஞையி னின்றும் நாம் தவறலாகாது; அதனுல் என்ன விளைகிறதெனக் கண்டறிவோம்.

ச. ஆனுல் உங்களுடைய இஷ்டம், அப்படியே செய்யலாம், ஆயினும் பிதா—

அ. அதிருக்கட்டும் சத்யவந்தா, எனக்கு மிகவும் தாக விடாயா யிருக்கிறது; அருகாமையிற் சென்று நா னருந்த ஜலம் சீக்கிரத்திற் கொண்டுவா, நான் அதிகமாகக் களைத்திருக்கிறேன்.

ச. அப்படியே, இதோ கொண்டுவந்துவிட்டேன்.

[போகிருன்.]

அ. ஆ! இதென்ன ஆச்சரியம்! என்றைக்கு மில்லாதபடி இப்பொழுது எனக்கு தாக மெடுக்கிறதே! காலை முதல் வேட்டையாடி வந்ததே இதற்குக் காரண மென்பதற்கைய மில்லை.—என்ன, என்னுடைய நண்பன் இன்னும் வரவில்லை? இதென்ன! எனது—நாவானது பேச எழவில்லையே—ஆ!—ஆ! [மூர்ச்சையாகிருன்.]

சுந்தரியும் சாகரிகையும் வருகிருர்கள்.

சு. தோழி, இன்னும் சற்று நேரம் இங்கு நாம் புஷ்பங்களைப் பறித்து விளையாடிவிட்டுப் பின்பு நாம் அந்தப்புரத்திற்

குச் செல்வோம்—அடி! சாகரிகா, இதோ கண்டாயா, இவ் வரும்புக ளெல்லாம் இப்பொழுதுதான் மலரத் தொடங்குகின்றன.

சா. ஆம் ஆம், சூரியன் அஸ்தமிக்குங் கால மாயிற்றே அம்மா! இப் பூந்தோட்டத்தைச் சுற்றி, ஓடி ஓடி, எனக்கு மிகவும் இளைப்பா யிருக்கிறது. இங்கே நாம் சற்றுட் கார்ந்து இளைப்பாறலாமா?

சு. அப்படி யல்ல சாகரிகா, இப் புஷ்பங்க ளெல்லாம் எவ்வளவு அழகா யிருக்கின்றன, இவைகளை மாலைகளாகத் தொடுத்தால் மிகவும் அழகா யிருக்கு மன்றோ? இம் மலர்களைப் பறிப்போம் வாராய்.

சா. ஆம், இதுவும் நல்ல யோசனைதான், ஆனால் சீக்கிரம் பறி, சூரியன் அஸ்தமிக்கும் வேளையாய் விட்டது. நாமும் அந்தப்புரத்தைவிட்டு வந்து நெடுநேரம் ஆயிற்று, சீக்கிரம் திரும்பிப் போகவேண்டும்.

[புஷ்பங்களைப் பறிக்கின்றனர்.]

சு. அடி, சாகரிகா, இம் மல்லிகைக் கொடியைக் கண்டாயா! இது இப் பாரிஜாதச் செடியைச் சுற்றியிருப்பது ஓர் நாயகி தன் காதலனைத் தழுவி நிற்றல்போல் இருக்கிறது.

சா. ஓஹோ! சுந்தரீ! இதனால் உன் உண்மையான எண்ணத்தை வெளியிட்டு விட்டாய்; இனி ஒளிப்பதிற் பயனில்லை. இம் மல்லிகை பாரிஜாதத்தைத் தழுவி நிற்றல்போல நீயும் ஓர் காதலனை யடைந்து சீக்கிரம் சுகிக்கக் கருதுகிறா யன்றோ? உண்மையைக் கூறிவிடு.

சு. அடி சாகரிகா! என்ன பரிகாசஞ் செய்கிறாயோ?

[திரைக்குள் "சாகரிகா சாகரிகா"]

சா. அம்மா, அந்தப்புரத்தில் யாரோ என்னை அழைக்கிறார்கள். நீ இங்கேதா னிரு. நான் சென்று கேட்டுவிட்டு சீக்கிரம் வருகிறேன். [போகிறாள்.]

சு. நம்முடைய தோழி திரும்பி வருவதற்குமுன் இப் புஷ்பங்களை யெல்லாம் பறித்து ஓர் ஹாரமாகக் கட்டுவோம்.

[இன்னும் சில புஷ்பங்களை பறிக்கிருள்.]

சாகரிகையை இப்பொழுது யார் அந்தப்புரத்தில் அழைத்திருக்கலாம்? எல்லாம் அவள் வந்தவுடன் விசாரித்தறிகிறேன்.

[திரும்பி, உறங்கும் அதிரூபனைக் காண்கிருள்.]

ஆ! இதென்ன ஆச்சரியம்! இது யார்? யாரோ ஒரு சுந்தர புருஷன் இங்கு நித்திரை செய்கிருர். நம்முடைய பிதா அந்தப்புரத்தைச் சார்ந்த இந்த நந்தவனத்தில் ஒரு புருஷனும் வரலாகாதெனக் கட்டளையிட் டிருக்கிருரே! இவ் வடிவழகுள்ள புருஷனை இங்கு காண்பாராயின் இவருக்குத் தீங்கு நேரிடுமே. ஐயோ, பாவம்! இம் மஹா புருஷன் யாராக இருக்கலாம்? சற்று அருகிற் சென்று பார்ப்போம்; இவ்வளவு வடிவழகுள்ள புருஷனை நான் எங்கும் இதுவரையில் கண்டதில்லையே! இவருடைய முகமானது கோடி சூரியனைப்போலப் பிரகாசிக்கிறதே! இவருடைய அழகை யாரால் வர்ணிக்கக் கூடும்? ஒருகால் அனங்கனே என் மனத்தைப் பரிசோதிப்பதற்காக ஓர் அங்கங்கொண்டு வந்திருக்கிருரோ? அவ்வாருயின் கரும்புச் சிலையைக் காணுேமே! அல்லது ஹரியா யிருக்கலாமோ? ஹரியாயின் சங்கு சக்கரச் சின்னங்களைக் காணுேமே! பூலோகத்தில் இவ்வளவு வடிவழ கமைந்த புருஷனைக் காண்ப தரிது! இவரை தேவ கணங்களி லொருவரென்றே கூறவேண்டும். ஒருவேளை தேவேந்திரனுக இருக்கலாமோ? இல்லை இல்லை, ஆயிரங் கண்க ளில்லையே! பின்பு யாராக இருக்கலாம்? எப்படியும் இவர் சிறந்த ராஜகுமார னென்பதற்குச் சிறிதும் தடை யில்லை. முகத்தை நோக்குமிடத்து அது வெளியாகிறது. விதர்ப்ப தேசத்து மஹாராஜாவின் குமாரர் அதிரூபன் என்பவர் மதனை வென்ற அழகு வாய்ந்தவ

றென்று கேள்விப்பட் டிருக்கிறோம்; ஒருகால் இவரே அதிரூபராக இருக்கலாமோ? இன்னும் சற்று அருகிற் சென்று பார்க்கிறேன்—இச் சுந்தர புருஷாது அருகிற் செல்வதென்றால் எனக்கு எவ்வளவு நாணமா யிருக் கிறது! ஆயினும் அவ்வாறு செய்தல் சந்தோஷத்தையும் தருகிறது! காதலென்பதைப்பற்றி நான் கேள்விப்பட் டிருக்கிறேன். இதுவோ காதல்? நான் இச் சுந்தர புரு ஷன்மீது காதல்கொண் டிருக்கிறேனா என்ன? என் மன மானது என்று மில்லாதபடி அவரையே நாடுகிறதே! ஆம்! ஆம்! இது காதல்தான் என்பதற்குச் சந்தேகமே யில்லை. ஆயினும் இவர் இன்னாரென் றறிவதன்முன் இவர்மீது நாம் காதல் கொள்ளுதல் முறையோ? ஆ! மனமே சற்றுப் பொறு! அவசரப்படாதே! இவர் கையில் ஓர் மோதிரம் அணிந்திருக்கிறார்; அதைக் கழற் றிப் பார்ப்போமாகில் இவர் யாரென்று வெளியாகும்.—

[அருகிற் சென்று]

ஆயினும் நான் கன்னிகையா யிருந்து ஒரு புருஷனைத் தீண்டலாமா?— மனமே! அதைரியப்படாதே. அவ் வாறு செய்தல் தவ றன்று. எப்பொழுது நான் இவர் மீது காதல் கொண்டேனோ, அப்பொழுதே அவருடைய பத்தினி யாய்விட்டேன். ஓர் காதலி தன் கணவனது கரத்தைத் தீண்டுவதில் என்ன தவறு? அயர்ந்து நித் திரை செய்கிறார்.

[அவனது கணையாழியை மெல்ல கழற்றுகிறாள்.]

ஐயோ! என்னுடைய தௌர்ப்பாக்கியத்தை நானென் னென்று சொல்லுவேன்? இக் கணையாழியில் ஒரு பெய ரும் வெட்டப்பட வில்லையே! இனி என்ன செய்யலாம்? இவரை யெழுப்பி எல்லாம் கேட்ட றியலாமா? ஐயோ! அப்படிச் செய்வேனாயின் என் காதலர்க்கு நித்திரை பங்கம் நேரிடுமே!

[உள்ளிருந்து "அம்மா சுந்தரீ! சுந்தரீ!"]

ஐயோ! நான் என் செய்வது? இவரைவிட்டு நானெவ்வாறு பிரிவது? ஓர் யோசனை எனக்குத் தோன்றுகிறது. எனது கணையாழியைக் கழற்றி இவர் விரலிலணிந்துச் செல்கிறேன். அப்பொழுது இவர் விழித்தவுடனே அதனைப் பார்ப்பார். பிறகு ஓர் சாலத்தில் இது உபயோகப்படும்.

[தன் மோதிரத்தைக் கழற்றி அதிரூபன் விரலிலணிந்து]

இவருடைய மோதிரத்தை என் விரலிலணிந்து கொள்ளுகிறேன். [உள்ளிருந்து சுந்தரீ! சுந்தரீ!]

ஐயோ! நம்முடைய தோழி அருகில் வந்துவிட்டாள். ஐயோ! என் காதலரைவிட்டு நானெப்படிச் செல்வேன்? நம்முடைய தோழிக்கு நான் இவைகளையெல்லாம் வெளியிடலாகாது. இவர்மீது நான் காதல்கொண்டிருப்பது பிதாவுக்குத் தெரியுமாயின் பெருந் தீங்கு விளையும். நாம் விட்டுப் பிரிவதன்முன் இவரது மதி போன்ற முகத்தை முத்தமிட்டுச் செல்வோம்.

[முத்தம் கொடுக்கிறாள்.]

இன்னுமொரு தரம் [மறுபடியும் முத்தமிடுகிறாள்.]

காதலரே! நான் உம்முடையவளாயினேன். என்னை நீர் மறக்கலாகாது—எல்லாம் உமது கருணை.—நான் போய் வருகிறேன். [முன்னால் விரைந்து வருகிறாள்.]

**சாகரிகை** ஓர் மலர் மாலையுடன் மறுபடி வருகிறாள்.

சா. அம்மா, உன்னை நான் எவ்வளவு நேரந் தேடுவது? இந்நேரம் எங்கிருந்தாய்?

சு. தோழி, இங்குள்ள புஷ்பங்களையெல்லாம் ஒவ்வொன்றாகப் பறித்துக்கொண்டிருந்தேன், அதனால் நேரமாயது.

சா. அப்படியா? அதிருக்கட்டும், கண்ணே, என்ன உன் முகம் வாட்டங்கொண்டிருக்கிறதே—உன்னைப் பார்க்குமிடத்து இப்பொழுதுதான் யாரோ ஒரு சுந்தர புரு

ஷனைக் கண்டு காதல்கொண்டு வந்தாற்போலத் தோன்று கிறதே.

சு. தோழி! என்னை பரிகாசஞ் செய்கிறாயோ? எனக்குத் தெரியும், நீ யார்மீதோ காதல்கொண் டிருக்கிறாற்போலத் தோன்றுகிறது, அதை என்மீது சாற்றிப் பேசுகிறாயோ?

சா. அதெப்படியாயினு மாகுக, கண்மணியே! நீ யுன் கருத்திற் கிசைந்த கணவனைச் சீக்கிரத்தில் மணம் புரிவாயாக!

[தான் கொண்டுவந்த மாலையை சுந்தரியின் கழுத்திற் போடுகிறாள்.]

ஒரு தோழி வருகிறாள்.

தோ. அம்மா! நீங்க ளென்ன இங்கு விளையாடிக்கொண் டிருக்கிறீர்கள்? பொழுது சென்று நெடுநேர மாய்விட்டதே! சூரியன் அஸ்தமித்து விட்டான். இருட்டிவிட்டது. அந்தப்புரத்திற்கு வரவில்லையா?

சா. ஆம் அம்மா, நெடு நேர மாய்விட்டது. நாம் அந்தப் புரத்திற்குப் போவோம் வாராய்.

சு. [ஒரு புறமாக] ஐயோ! நா னெப்படிப் பிரிந்துச் செல்வேன்? இன்னும் ஒருதரம் பார்த்துவிட்டுப் போகிறேன்.

சா. அம்மா, என்ன திரும்பித் திரும்பிப் பார்க்கிறாய்?

சு. ஒன்று மில்லை, இதோ வந்துவிட்டேன்.—தோழி, சற்று நில், காலில் முள் தைத்தது, அதை எடுத்துவிட்டு வருகிறேன்.

சா. வா வா, சீக்கிரம், நேரமாய்விட்டது.

[மூவரும் போகிறார்கள்.]

அ. [கண் விழித்து] ஆ! இதென்ன! நான் இப்பொழுது எங்கிருக்கிறேன்? நான் கண்டது கனவோ நினைவோ? என் நண்ப னெங்கே? தண்ணீருக்காக அனுப்பினேம் அல்லவா! என்ன இன்னும் வரவில்லை?—இது நினைவா யிருக்குமா?

தண்ணீர் எடுத்துக்கொண்டு சத்யவந்தன் மறுபடி வருகிறான்.

ச. ஐயனே, என்னை மன்னிக்கவேண்டும் ஜலம் கொண்டு வரப் போன விடத்தில் சற்று கால தாமத மாயது.

அ. அப்பா, சத்யவந்தா, நான் இப்பொழுது தூங்குகிறே னோ? விழித்திருக்கிறேனோ? உண்மையைக் கூறு.

ச. அரசே! என்ன விளையாடுகிறீரோ? மிகவுங் களைத்திருக் கிறீர்; இந்த ஜலத்தை அருந்தும், அப்புறம் பேசலாம்.

[தண்ணீரைக் குடிக்கச் செய்கிறான்.]

அ. ஆ! சத்யவந்தா, நான் சற்று முன்பாக ஒரு கனவு கண் டேன். அதனை நான் என்னென்று சொல்வேன்! நான் இங்கு உறங்கும்பொழுது யாரோ ஒரு அதிரூபவதி யான ராஜ ஸ்திரீ வந்து, என்னைக்கண்டு, என்மீது காதல் கொண்டு, பிறகு எனக்கு முத்தமிட்டுச் சென்றதாகக் கனவு கண்டேன். அது கனவோ உண்மையோ, என்றே எனக்குச் சந்தேகமா யிருக்கிறது. ஒரு விதத்தில் யோசிக்கும்பொழுது கனவாகத் தோற்றுகிறது. இன் னும் சற்று யோசித்தால் உண்மைபோலத் தோற்று கிறது! ஆ! நண்பனே, அப் பெண்மணியின் அழகை நா னென்னென்று சொல்வேன்!

ச. ஐயனே! இதென்ன மனோப்பிராந்திகொண் டிருக்கிறீரா என்ன? இங்காவது, ஓர் ராஜ ஸ்திரீயாவது, வருவதா வது! நீர் கண்டது கனவாகத்தா னிருக்கவேண்டும்.

அ. தோழனே, அதுவு மன்றி அம் மாதுசிரோமணி எனது மோதிரத்தைக் கழற்றித் தன் விரலி லணிந்துகொண்டு தனது மோதிரத்தை எனது கையி லிட்டுச் சென்றதாக வும்—சத்யவந்தா! இதென்ன ஆச்சரியம்! இதோ பார்த் தாயா? என் விரலி லிருப்பது என்னுடைய மோதிர மன்றே! நான் கண்டதெல்லாம் உண்மைதான் என்பதற் குச் சிறிதும் சந்தேக மில்லை! இதோ பார்த்தாயா அக் கணையாழி! [அதற்கு முத்த மிடுகிறான்.]

ச. ஏதோ காட்டும்—ஐயனே! எனக்கும் ஆச்சரியமாகத்தா னிருக்கிறது. இது நீர் முன்பணிந்திருந்த மோதிரமன் றென்பதற்குச் சிறிதும் சந்தேக மில்லை. ஆயினும் இக் கணையாழி உம்முடைய விரலில் எப்படி வந்தது?

அ. தோழா, இனி நீ என்ன கூறினும் நம்பமாட்டேன். நான் கண்ட தவ்வளவும் உண்மையே! சந்தேக மில்லை. அக் கன்னிகையின் அழகை நான் எவ்வாறு உனக்குக் கூறப்போகிறேன்! அது யாராக விருக்கலாம்?

ச. ஐயனே, அம் மோதிரத்தில் ஏதாவது பெயர் வெட்டப் பட் டிருக்கிறதா பாரும்.

அ. ஆம்! ஆம்! தோழா, நல்ல யுக்தி கூறினாய்; இதோ பார்த் தாயா, சு,ந்,த,ரி, என்று வெட்டப்பட் டிருக்கிறது. சுந் தரியே! என் காதலியே! உனக்கு முத்த மிடுவதற்குப் பதிலாக உன் கணையாழிக்கு முத்த மிடுகிறேன்.

[அதற்கு முத்த மிடுகிறான்.]

தோழா, இச் சுந்தரி யாராக இருக்கலாம்?

ச. அரசே, எனக்கு மிகவும் ஆச்சரியமாகத்தா னிருக்கிறது, எனக்கு ஒன்றுந் தோற்றவில்லை.

ஒரு புரோஹிதர் வருகிறார்.

பு. போது போச்சு. நான் சீக்கிரம் ஜாகைக்குப் போக வேண்டும்.—அப்பா! நீங்கள் யார்? இப்போது நீங்கள் எங்கே யிருக்கிறீர்கள் தெரியுமா? ஐயோ! இது மஹா ராஜாவின் அந்தப்புரத்தைச் சார்ந்த உத்யான வன மாயிற்றே, இங்கு புருஷாள் ஒருவரும் வரலாகாதென்று மஹாராஜா கட்டளையிட் டிருக்கிறது உமக்குத் தெரி யாதோ? உங்களை யாராவது கண்டால் சிரசாக்னை நேரிடுமே; வயோதிகனான நேக்கு மாத்திரம் இவ் வழி யாகச் செல்ல உத்தர வுண்டு.

ச. பிராமணோத்தமரே, எங்களை மன்னிக்கவேண்டும். நாங் கள் இத் தேசத்தா ரல்ல, வேறு தேசத்திலிருந்து ஒரு

காரணமாக இங்கு வந்துவிட்டோம். இது அந்தப்புரத்து உத்தியான வனமென்று எங்களுக்குத் தெரியாது. இன்றிரவு தங்குவதற்கு ஓர் இருப்பிடம் எங்களுக்குக் காட்டுவீராயின் உமக்கு மிகவும் புண்ணிய முண்டு.

பு. ஐயோ பாவம்! வெளியூரார் போலும்! அப்பா, உங்களைப் பார்த்தால் நல்ல பிள்ளைகளைப் போலத் தோற்றுகிறது. வாருங்கள் சீக்கிரம், என்னுடைய ஆத்துக்கு உங்களை யழைத்துச் செல்கிறேன்.

ச. அப்படியே, இது எங்களுக்குப் பெரிய வுபகாரமாம்.

அ. [ஒரு புறமாக] தோழா, சுந்தரி என்பவள் யாரென்று அவரைக் கேள்.

ச. [ஒரு புறமாக] ஐயனே, இப்பொழுது பேசாமலிரும், எல்லாம் அப்புறம் விசாரிப்போம்.

[எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

---

## நான்காம் காட்சி

இடம்—வீரசேனன் அரண்மனையில் ஓர் அந்தரங்கமான அறை.

வீரசேனன் ஓர் ஆசனத்தில் வீற்றிருக்க, சற்றுதூரத்தில் சாகரிகை நிற்கிறாள்.

வீ. சாகரிகா, சுந்தரி எங்கே?

சா. மஹாராஜா, அந்தப்புரத்தி லிருக்கிறாள்.

வீ. அப்படியா, அதிருக்கட்டும், சுந்தரி இன்றைத்தினம் ஏதோ ஒருவாறு யிருப்பதாகக் கேள்விப்பட்டேன், அவள் ஏன் மனோ வியாகூலங்கொண் டிருக்கிறாள் உனக்குத் தெரியுமா? அவளுக்கு வருத்தத்தை யுண்டு பண்ணும்படியாக என்ன நேரிட்டது? அறிவாயா?

சா. மஹாராஜா, சுந்தரி ஏதோ சஞ்சலங்கொண் டிருக்கிறாள் என்பது உண்மையே, ஆயினும் அதற்குக் காரணம் ஒன்றும் எனக்குத் தோன்றவில்லை.

வீ. என்ன சாகரிகா ! நீ எப்பொழுதும் உன் தலைவியை விட்டுப் பிரியாதிருக்கிறாய். அப்படி யிருக்கும்பொழுது உனக்குத் தெரியா திருக்குமா ? ஒரு வேளை சுந்தரி காதல் கொண் டிருக்கிறாளோ ?

சா. நான் அப்படி நினைக்கவில்லை. சுந்தரி யார்மீது காதல் கொள்ளப் போகிறாள் ? அந்தப்புரத்தில் உங்களை யன்றி ஒரு புருஷனும் வந்ததில்லையே ?

வீ. சரி, ஆனால் நீ யுள்ளே சென்று சுந்தரியை நான் அழைப்பதாகச் சொல்.

சா. அப்படியே, மஹாராஜா. [போகிறாள்.]

வீ. சுந்தரி ஏன் விசனமுற் றிருக்கிறாள் ? அவளுக்கு விவாகஞ் செய்யவேண்டிய பருவம் வந்துவிட்டது. அவள் கன்னிகைப் பருவத்தை யடைந்து நெடுநாள் ஆயது; ஒருகால் இன்னும் விவாகமாகவில்லையே யென்று விசனமுற் றிருக்கிறாளோ ? அவ்வாறுதா னிருக்கவேண்டும். ஆதலால் இது தான் அவளுக்கு என்னுடைய எண்ணத்தைத் தெரிவிப்பதற்கு தகுந்த சமயம்.

**சுந்தரியும் சாகரிகையும் வருகிறார்கள்.**

வீ. கண்மணியே, எனதருகில் வந்துட்கார். சாகரிகா, நீ சற்று அப்புறம் போயிரு.

[சாகரிகை போகிறாள்.]

குழந்தாய், சுந்தரி. என்ன விசேஷம் ? உனது முகமானது இத்தனை நாட்களாக இருந்ததுபோ லிராமல் இன்றைக்கு வேற் றுருவங்கொண் டிருக்கிறதே ? மதியை வென்ற உனது வதனம் வெளுத்துக் காட்டுவா னேன் ? —குழந்தாய், என்ன நான் கேட்பதற்குப் பதில் கூறாது சும்மா இருக்கிறாய் ?

சு. ஒன்று மில்லை தந்தையே.

வீ. கண்ணே, ஏன் என்னிடம் ஒளிக்கிறாய்? உண்மையைக் கூறிவிடு. உனக்கு யாராவது தீங்கு செய்தார்களா? அல்லது அரண்மனையில் உனக்கு நடக்கவேண்டிய மரியாதைகளில் ஏதாவது தவறியதோ? அல்லது ஏதாவது பிணியினா லிப்படி யிருக்கிறாயா?

சு. ஐயனே, அப்படி யொன்று மில்லை.

வீ. அப்படியானால் நீ மனோ வியாகூலங்கொண் டிருப்பதற்குக் காரணத்தை யறிந்துகொண்டேன். குழந்தாய், என் கண் மணியே, என்னிடம்கூற லஜ்ஜைப்படுகிறாய் போலும். சுபாவந்தான்.—சுந்தரி, உனக்கோ விவாகஞ் செய்து கொடுக்கவேண்டிய காலம் வந்துவிட்டது. இனி நீ வருந்தவேண்டாம். உனக்குத் தக்க புருஷனை சம்பாதித்துச் சீக்கிரத்தில் விவாகஞ் செய்யத் தீர்மானித்திருக்கிறேன்.—

சு. [தனக்குள்] மனமே! சற்றுப் பொறு.!

வீ. இதோ சாளுவதேசத் தரசனிட மிருந்து கடிதம் வந்திருக்கிறது. அவருடைய குமாரராகிய மித்ரவசு உன் மீது காதல்கொண் டிருக்கிறாராம். உன்னை மித்திரவசுவுக்கு விவாகஞ் செய்துகொடுக்க எனக்குச் சம்மதி தானாவெனக் கேட்டிருக்கிறார். சீக்கிரத்தில் மித்திரவசுவும் இங்கு வருவதா எழுதி யிருக்கிறார். குழந்தாய், மித்திரவசு மிகவும் ரூபலாவண்ய முடையவன், மிகுந்த செல்வ வந்தன்; அவ் விராஜ குமாரனுக்கே உன்னைப் பாணிக்கிரஹணஞ் செய்துகொடுக்கலாமென்றெண்ணி யிருக்கிறேன். ஆயினும் அப்படித் தீர்மானிப்பதற்கு முன், உன்னுடைய எண்ணத்தை கேட்கலாம் என்றே உன்னை யழைத்தேன்; என்ன சொல்லுகிறாய்?

சு. [தனக்குள்] ஐயோ! இதென்ன?—தந்தையே, எனக்கு இப்பொழுது விவாகத்தின்மீது பிரியமே யில்லை இதற்குள்ளாக எனக்கு விவாக மென்னத்திற்கு?

வீ. என் கண்மணியே! அவ்வா றல்ல! இன்னும் உன்னைக் கன்னிகையாகவே வைத்திருத்தல் மிகவும் தவறும்; ஆத லால் நான் உன்னை சாளுவ ராஜகுமாரன் மித்திரவசு வுக்கு விவாகஞ் செய்து கொடுக்கத் தீர்மானித்திருக் கிறேன். உன்னுடைய நலத்தைக்கோரியே அவ்வாறு செய்கிறேன். நீ யதற்கு எப்படியும் ஒப்புக்கொள்ள வேண்டும்.

ஒரு சேவகன் வருகிறான்.

சே. மஹாராஜா, சாளுவதேசத் தரசனுடைய குமாரர் தங் களைப் பார்ப்பதற்காக ஆசார வாசலில் வந்திருக்கிறார்.

வீ. ஓஹோ! இதற்குள்ளாக வந்துவிட்டாரா? இதோ நான் வருவதாகச் சொல் போ. [சேவகன் போகிறான்.] குழந்தாய், இந்த ராஜகுமாரன் உன்னைத் தேடி எவ் வளவு துரிதமாக வந்திருக்கிறான் கண்டாயா? மித்திர வசுவே உனக்குத் தக்க கணவன். இதோ சற்று நேரத் திற்குள்ளாகப் பார்த்துவிட்டு வருகிறேன். [போகிறான்.]

சு. ஐயோ! இதென்ன ஆச்சரியமாக இருக்கிறது! நா மொன்று நினைக்க தெய்வமொன்று நினைத்ததே! நான் மித்திரவசுவையா மணம் புரியவேண்டும்? நான் எவ் வாறு அவ் விராஜ குமாரனை மணம் புரிவது? என் மன மெல்லாம் அன்று நான் பூஞ்சோலையில் கண்ட மஹா புருஷன்மீதே இருக்கிறதே! ஒரு க்ஷணப்போதும் அவ ருடைய மதனை வென்ற உருவம் என் மனத்தைவிட்டு அகலவில்லையே! எப்பொழுது அம் மஹாபுருஷன்மீது நான் காதல் கொண்டேனே, அப்பொழுதே நான் அவருக்கு மனைவியாய் விட்டேன்; ஆதலால் இப்பொ ழுது நான் மித்திரவசுவை எவ்வாறு மணம் புரிவது? பிதாவினிடம் இவ் விஷயங்களை யெல்லாம் கூறலா மென்றாலோ, எனக்கு நாவெழவில்லை! அதுவுமன்றி பிதாவானவர் ஒன்றைத் தீர்மானித்து விட்டால் மும் மூர்த்திகளும் வந்து வேண்டிய போதிலும் அதனை மாற்ற

மாட்டாரே! ஐயோ! இச் சங்கடத்திற்கு நான் என்ன செய்வேன்? இதுவோ என்னுடைய விதி! ஐயோ!—இதற்கு நான் யாரை நோவது!—யாரை நொந்து பயன் என்ன? என்னையே நான் நொந்துகொள்ளவேண்டும். ஆ! பிராணநாதா! இவ்வாறு நீர் என்னை வருத்துவது நியாயமோ? நீர் யாரென்று அறியாது நான் தவிக்கிறேனே. நீர் ஓர் சிறந்த ராஜகுமாரர் என்பதற்குச் சந்தேக மில்லை. அப்படி யிருக்க, எனது தந்தை என்னை மித்திரவசுக்கு விவாகஞ் செய்வதற்குமுன், அவரிடம் வந்து, நீர் இன்னரென்று தெரிவித்து, என்னை மணம் புரியலாகாதா? ஐயோ! உம்மைக் கண்டபின் நான் வேறொரு புருஷனை மணம் புரிவேனே? மித்திரவசுவினுடைய படத்தை நான் கண்டிருக்கிறேன். உம்முடைய சுந்தரத்தில் ஆயிரத்தி லொரு பங்கும் மித்திரவசுவுக்கு இல்லையே! ஆ! பிராணநாயகா! உம்மை மறுபடியும் எப்பொழுது காணப் போகிறேன்? இத் துயர்க் கடலி னின்றும் எவ்வாறு கரையேறுவேன்!

மறுபடி சாகரிகை வந்து அவள் கால்மாட்டில் உட்காருகிருள்.

சா. அம்மா! சுந்தரி! ஏன் கண்ணீர் விடுகிருய்? கண்ணே! அழவேண்டாம் [முகத்தை துடைக்கிருள்.]

சு. அடி சாகரிகா! என்னுடைய ஜன்மத்தை என்னென்று சொல்வேன். ஐயோ! ஏனே இவ் வுலகில் நான் பெண்ணுகப் பிறந்தேன்!

சா. கண்ணே! நீ யிப்பொழுது யாரோ ஒரு புருஷன்மீது காதல் கொண்டு அதனல் வருந்துகிருய் என்பதற்குச் சிறிதும் சந்தேக மில்லை. என்னிடம் ஒளித்துப் பேசாதே; உன்னுடைய இளைத்த மேனியைப் பார்க்கும்பொழுது அது பிரத்தியக்ஷமாகத் தெரிகிறது. இனி ஒளிப்பா னேன்? நீ காதல்கொண் டிருக்கும்படியான அப் புண்ணிய புருஷன் யார்? நான் ஒருவரிடமும்

வெளியிட வில்லை நீ என்னிடம் மாத்திரஞ் சொல்.

சு. அடி தோழி, உன்னிடங் கூருது வேறு யாரிடம் என்னுடைய துர்ப்பாக்கியத்தைச் சொல்லப் போகிறேன்? அன்றைத்தினம் நாம் சாயங்காலமாகப் பூந்தோட்டத்தில் விளையாடிக்கொண் டிருந்தோமே, அப்பொழுது அந்தப்புரத்தி னின்றும், உன்னை யாரோ அழைக்க, நீ என்னைத் தனியாக விட்டுச் சென்ருயல்லவா? அப்பொழுது நான் புஷ்பம் பறித்துக்கொண் டிருக்கும் போது, அங்கே யாரோ ஒரு சுந்தர புருஷன் படுத்து நித்திரை செய்துகொண் டிருந்தார், அவரைக் கண்டது முதல்— [முகத்தை கவிழ்ந்து கொள்கிருள்.]

சா. ஆம், ஆம், அப்புறம், அவரைக் கண்டவுடன், அவர் மீது காதல் கொண்டாய், அப்புறம் என்ன? அவருடன் வார்த்தை யாடினுயா? அவர் இன்னுரென் றறிந்தாயா?

சு. ஐயோ! தோழி, அதுதானே என்னுடைய தௌர்ப்பாக்கியம். அவர் நித்திரை செய்துகொண் டிருந்தமையால் அப்பொழுது எழுப்புவது நியாய மல்லவென்று அப்படியே நின்றுகொண்டு, அவருடைய வடிவழகைக் கண்டு வியந்துகொண் டிருந்தேன். சற்று நேரமாயும் அவர் எழுந்திருக்கவில்லை. இதற்குள்ளாக உன் குரலைக் கேட்கவே நான் நாணமுற்று வந்துவிட்டேன். அந்த க்ஷணமுதல் அவருடைய ரூபம் எனது மனத்தைவிட்டகலவில்லையே! அவரையே என் மனம் நாடுகிறது! சகி, நான் என் காதலனை மறுபடியும் இந்த ஜன்மத்தில் காணப்போகிறேனே?

சா. அம்மா, என்ன ஆச்சரியமாக இருக்கிறது. நமது உத்தியான வனத்தில் ஒரு புருஷனும் வரலாகாதென்று பிதா கட்டளையிட் டிருக்கிருரே; அப்படியிருக்க அங்கு யார் வந்திருக்கக் கூடும்? ஒரு வேளை நீ கண்டது கனவோ?

சு. சாகரிகா! நீ என்னை பரிகாசஞ் செய்யலாமோ? நான் கண்டது உண்மை என்பதற்குச் சிறிதும் சந்தேக மில்லை.

இதோ பார்! என் கண்ணாளனை விட்டு நான் பிரிய மனமின்றிப் பிரிந்த காலத்தில், ஓர் அடையாளமாக; எனது கணையாழியை அவர் விரலி லிட்டு, அவருடைய மோதிரத்தை நான் அணிந்து வந்திருக்கிறேன். தோழி, என் கண்ணாளனை நான் எப்பொழுதடி காணப் போகிறேன்?

சா. [ஒரு புறமாக] ஓஹோ, இது உண்மைதான், சற்றேனுஞ் சந்தேக மில்லை.—ஆயினும், அம்மா, அம்ம ஹா புருஷன் யாரென்று உனக்குத் தெரியாதா?

சு. ஐயோ! அது தெரியாமற்றானே நான் தவிக்கிறேன். அவர் ஒரு ராஜகுமாரர் என்பதற்குச் சிறிதும் சந்தேக மில்லை! அவருடைய முகாரவிந்தத்தை நோக்கிய பொழுதே அது வெளியாயது. அடி தோழி, அவருடைய அழகை உனக்கு நான் என்னென்று சொல்லுவேன்! அவருடைய ரூபத்தைக்காண ஆயிரங்கண்கள் வேணுமடி! சாகரிகா, அம் மஹா புருஷனைக் கண்டது முதல் எப்பொழுது அவரை யெனக்கு நாயகனைப் பெறுவேனோ என்கிற எண்ணமே, என் மனதில் குடிகொண் டிருக்கிறது! அதுவே என்னை வருத்திக்கொண் டிருக்கிறது! நான் என்ன செய்வேன்?

சா. அம்மா, இதை முன்பே என்னிடம் கூறியிருக்கலாகாதா? நீ இனி வருந்தவேண்டாம். நான் பிதாவுக்கு எல்லாவற்றையு மறிவித்து, அக் காதலன் யாரென்று கண்டுபிடித்து அவருக்கு உன்னை விவாகஞ் செய்து கொடுக்கும்படியாக நான் கேட்கிறேன், நீ அதைரியப் படாதே.

சு. ஐயோ! அவசரப்படாதே, அவசரப்படாதே!

[எழுந்து அவள் கையைப் பிடித்துக்கொண்டு]

உனக்கு இன்னும் எல்லாச் சமாசாரமுந் தெரியாது. என்னுடைய துர் அதிர்ஷ்டத்தை இன்னும் நன்றாய்க்

கேள். பிதாவானவர் இப்பொழுதுதான் வந்து, நான் இவற்றை யெல்லாம் கூறுவதற்குமுன், என்னைச் சாளுவ தேசத்து ராஜகுமாரருக்கு விவாகஞ்செய்து கொடுக்கத் தீர்மானித்திருப்பதாகக் கூறிச் சென்றார். பிதாவோ ஒன்று தீர்மானித்தபிறகு பின்வாங்கமாட்டாரே! இவ் விஷயங்களை யெல்லாம் அவருக்குத் தெரிவித்தால் மிக வுங் கோபங் கொள்வாரே, இதற்கு என்ன செய்வது?

சா. என்ன அம்மா! உன்னையா மித்திரவசுவுக்கு விவாகஞ் செய்து கொடுக்கப் போகிறார்? தேவ கன்னிகையை விறகு தலையனுக்குக் கொடுப்பார்களோ! எப்படி யிருந்த போதிலும் உன்னை மித்திரவசுவுக்கு விவாகம் செய்யா திருக்கும்படி நான் முயலுகிறேன். நீ யுனது கருத்திற் கிசைந்த காதலனை மணம் புரிவாயே யன்றி வேறொரு வனையும் மணம் புரியலாகாது.

சு. அடி தோழி, நீ கூறிவிட்டாலாகுமோ? பிதாவோ உறுதி யாகக் கூறிச் சென்றார்; நா னவருக் கென்ன உத்தரம் சொல்வது?

சா. அதைத்தான் நானும் யோசிக்கிறேன். ஏனம்மா! நீ இப்பொழுது ஒரு விரதம் பூண்டிருப்பதாயும், அவ் விர தம் முடிவதற்கு இன்னும் ஒரு மாதஞ் செல்லுமென் றும், அவ் விரதம் முடிந்த பின்பே, நீ மணம்புரியக் கூடும் என்றும் சொல்லிவிடு. இதற்குள்ளாக உன் காத லன் யாரென்று நாம் ரகசியமாக விசாரித் தறிவோம்.

சு. ஆம்! ஆம்! தோழி இது நல்ல யோசனை தான்—ஆயி னும் என் காதலனை நாம் எப்படிக் கண்டு பிடிப்பது? இப்பொழுது இப் பட்டணத்தி லிருக்கிறாரோ அல்லது போய் விட்டாரோ?

சா. அம்மா, சுந்தரி, நீ அதைரியப்படவேண்டாம். இதோ அவருடைய மோதிரம் இருக்கிறதல்லவா, இதைக் கொண்டு நாம் நன்றாக விசாரிப்போமாகில், எப்படியும் கண்டு பிடிப்போம். அதுவுமன்றி உன்னுடைய கனே

யாழி அவர் கையில் இருக்கிறதே; அதில் உன் பெயர் வெட்டப்பட்டிருக்கிறதல்லவா? ஆதலால் "சுந்தரி" யாரென்று விசாரியாது உன் காதலர் இந்நகரத்தை விட்டுச் செல்லார்.

சு. அடி சாகரிகா, இந்த ஒரு உபகாரம் மாத்திரம் நீ எனக்குச் செய்யவேண்டும். நீ எப்படியாவது முயன்று அவர் யாரென்று விசாரித்து எனக்குத் தெரிவிக்கவேண்டும். அப்படிச் செய்வாயானல் எனக்கு உயிர்ப் பிச்சை யளித்தா யாவாய்.

சா. அம்மா, இதைக் குறித்து நீ இனி கவலைப்பட வேண்டாம். நாளைத்தினம் சூரியன் புறப்படு முன்னே உன் காதலர் இன்னரென்று கண்டறிந்து உனக்குத் தெரிவிக்கிறேன், உன் மனக் கலக்கம் நீங்கி சந்தோஷமா யிரு.

சு. ஐயோ! தோழி நான் எவ்வாறு சந்தோஷமா யிருப்பேன்? எந்நேரமும் என்னுடைய மனம் எனது காதலரையே நாடுகிறது. அவரைப்பற்றி நினைக்கும்போதெல்லாம் என் மனம் வருந்துகிறது. இந்த வருத்தத்தை எவ்வாறு நான் சகிப்பேன்? காமன் என்மீது கருணையின்றி கணை பொழிகிருனே! ஐயோ! நான் படுந் துயரத்தை என் காதலரிடம் யார் போய் சொல்லப் போகிருர்கள்?

சா. அம்மா, நான் முன்பே கூறினேனே! நீ சீக்கிரத்தில் உன் காதலரை அடையும்படி நான் செய்விக்கிறேன் பயப்படாதே. அதுவரையில் உன் மனத்தை எதன்மீதிலாவது செலுத்திக்கொண்டிருக்கவேண்டும். சங்கீதத்தினல் துக்கம் தணியு மென்பார்கள்—இதோ பாடுகிறேன் கேள். [பாடுகிருள்.]

காட்சி முடிகிறது.

## ஐந்தாம் காட்சி

இடம்—புரோஹிதர் வீட்டில் ஓர் அறை.

அதிரூபனும் சத்யவந்தனும் வருகிறார்கள்.

அ. அப்படியல்ல, சத்யவந்தா,—

ச. ஐயனே! என்னை பெயரிட் டழைக்கவேண்டாம். நாம் ஒருவரை யொருவர் பெயரிட் டழைப்போமாகில், இங்குள்ளவர்கள் நம்மை எளிதில் இன்னாரென்று கண்டு பிடித்து விடுவார்கள். நாம் செய்துகொண்ட பிரதிக்ஞையை இதற்குள்ளாக மறந்துவிட்டீரோ?

அ. ஆம்! ஆம்! தோழா, என்னை மன்னிப்பாய்,—ஆயினும், நீ என்ன கூறினபோதிலும், நான் கேளேன். இந்த சுந்தரி யாரென்று கண்டு பிடிக்காமல், நாம் நம்முடைய பட்டணத்திற்குத் திரும்ப லாகாதென்று தீர்மானித்து விட்டேன்.

ச. ஐயனே, சற்று ஆலோசித்து பிறகு அவ்வாறு தீர்மானியும். நாம் நம்முடைய நகரத்தை விட்டு வந்து இரண்டு மூன்று நாட்க ளாய்விட்டன. பிதாவோ, ஒரு க்ஷணப் போதும் தாமதியாது வேட்டையை முடித்துக்கொண்டுத் திரும்பி வரும்படியாகக் கட்டளையிட் டனுப்பினர்; நாம் சீக்கிரம் போகாவிட்டால் என்ன நினைப்பார்?

அ. என்ன நினைக்கப் போகிறார்? எங்கேயோ தேச சஞ்சாரஞ் செய்யப் போயிருப்பார்க ளென்று நினைக்கப் போகிறார், அவ்வளவே.

ச. அப்படி ஒருகாலும் நினைக்கமாட்டார். நம்முடைய பரிவாரங்கள் நம்மைக் காணேமென்று கூறினவுடனே, ஏதோ நமக்குக் காட்டு விலங்குகளால் தீங்கு நேரிட்டு விட்டதன்றே நினைப்பார்; இதற்குச் சற்றேனும் ஐயமில்லை. ஆதலால் நாம் சீக்கிரம் போகாவிட்டால் அவர் எவ்வளவு துயரப்படுவாரென்று நீரே யோசித்துப்

பாரும்— ஐயனே, நாம் திரும்பிச் செல்வோம் நம்மூருக்கு.

அ. நண்பா, நீ என்ன சொன்னபோதிலும் பிரயோஜனமில்லை. நான் எப்படியும் சுந்தரி யாரென் றறிந்து இன்னும் ஒரு முறையாவது கண்டுவிட்டே போகவேண்டும். அம் மாது சிரோமணியை நீ கண்டிருப்பா யானல் இவ்வாறு கூறமாட்டாய். அவளை ஒரு முறை கண்டவர்கள், பிரிய விரும்புவார்களோ ?

ச. ஐயோ ! இன்னும் கேளும், நாம் புறப்படும்பொழுது உம்மை ஒரு குறையு மின்றி சீக்கிரத்திற் பிதாவிடம் ஒப்புவிப்பதாக நான் கூறினேனே ! நான் அப்படிச் செய்யவில்லையே யென்று பிதா என்மீது மிகவுங் கோபங்கொண்டிருப்பா ரன்றோ ?

அ. என்ன, நான் எவ்வளவு கூறியும் ஓரே பிடிவாதமாகப் பேசுகிறாய் ? உனக் கிஷ்ட மிருக்கு மாயின் நீ மாத்திரம் திரும்பிப் போ !

ச. ஐயனே, உம்மை யிங்குவிட்டு நானே தனியாகப் பட்டணஞ் செல்வது ? நான் உம்மைவிட்டுப் பிரிவேனே ? இதற்காக நீர் ஏன் கோபங் கொள்ளுகிறீர் ? மஹாராஜா கோபித்துக்கொள்ளுவாரே யென்று கூறினேனே யொழிய மற்றபடி யன்று.

அ. அப்பா, நான் உன்மீது கோபமா கொண்டேன் ! அப்படி ஏதாவது நான் கோபமாக மொழிந்தே னாயின் மன்னிப்பாய்—தந்தை மிகவுங் கோபங்கொள்வா ரென்பது உண்மையே.—உன்னைக் கடிந்துகொண்டால், நான் பல வந்தப்படுத்தின தாகக் கூறிவிடு. பிதா வருந்துவாரென்று எனக்கு நன்றாய்த் தெரியும். ஆயினும் நான் என்ன செய்வது ? என்னுடைய மனோ நிலைமை உனக்குத் தெரியாது ; அப் பெண்மணியைக் கண்ட நாள் முதல் எனதெண்ண மெல்லாம் அவள் பேரிலேயே யிருக்கிறது.

அவளை நான் சீக்கிரத்திற் காணுவிடில் என துயிர் போய் விடும்—

ச. ஆம், ஐயனே, நாம் இங்கேயே இன்னுங் கொஞ்ச நாள் இருப்போமென்று எண்ணுவோம். எத்தனை நாள் இருந்தபோதிலும், நாம் சுந்தரி என்பவள் யாரென்று எவ்வாறு கண்டறிவது? நாமோ இன்னொன்று ஒரு மாதம் வரையில் வெளியிட லாகாதென்று பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிறோம்! நாம் யாரை விசாரிப்பது? எவ்வா றறிவது?

அ. அதனு லென்ன? தோழா, இதனால் என்ன துன்பம் வந்த போதிலும் சுந்தரியைக் கண்டு பிடியாது நாம் நம்முடைய ஊருக்குச் செல்லலாகாது.

ச. ஐயனே, எனக்கு அவ்வாறு கண்டு பிடித்தல் மிகவும் கடினமெனத் தோற்றுகிறது—இல்லை கண்டு பிடித்தோம், பிறகு சுந்தரி என்பவள் ஓர் பிரஜையினுடைய மகளா யிருந்தால் அவளை நீர் மணம் புரிதல் நியாயமாமோ?

அ. என்ன சொன்னுய்? சுந்தரி அற்ப குலத்தி லுதித்த பெண்ணு யிருப்பாளென்று சந்தேகப்படுகிருயோ? தோழா! நான் சந்தேகப்படுவ தென்னவென்றால், தேவ கன்னிகை பூலோகத்தில் எவ்வாறு உதித்தனளென்றேயாம். சுந்தரி சிறந்த வம்சத்தி லுதித்த ராஜகுமாரி என்பதற்குச் சந்தேகமே யில்லை.

ச. ஐயனே, இவ்விடத்தில் நீர் கூறியபடி அவ்வளவு வடிவழகமைந்த எந்த ராஜகுமாரி இருக்கப் போகிறுள்?

அ. அதுவே எனக்குஞ் சந்தேகமா யிருக்கிறது. ஆயினும் நாம் எந்தப் பட்டணத்திற்கு வந்திருக்கிறோமென்று இன்னும் கண்டறிய வில்லையே?

ச. ஆமாம், நாம் முன்பே அதைக் கேட்டறியாதது தவறேயாம். இதோ, நம்முடைய வீட்டுப் பிராம்மணர் வருகிறுர், அவரைக் கேட் டறிவோம்.

புரோஹிதர் வருகிறார்.

பு. ஆ ! என்ன சாப்பாடு ! என்ன சாப்பாடு ! விருந்தென்றால் இதையே கூறவேண்டும் ! ஐயோ ! பிள்ளைகளே, நீங்கள் பிராம்மணர்களாகப் பிறவாதது நீங்கள் செய்த துர் அதிர்ஷ்டம்தான் !

ச. என்ன ஐயா, என்ன விசேஷம் ?

பு. ஐயோ ! அதை என்னென்று சொல்வது ? தேவாமிர்தந்தான்—ஒரு வடையில் எத்தனை விதங்கள் ! எத்தனைவித பச்சடிகள் ! எத்தனைவித அப்பளங்கள் !—

ச. எங்கே ?

பு. வேறு எங்கே யிருக்கப் போகிறது ? நம்முடைய மஹாராஜா வீட்டில்தான். பிராம்மண ஜன்ம மெடுத்ததற்கு இன்றே எனது ஜன்மம் பலிதமாயது. மஹாராஜாவாகப் பிறந்தால் இப்படிப்பட்டவராக வல்லவோ பிறக்கவேண்டும் !

அ. பிராம்மணோத்தமரே, இந்த வூர் மஹாராஜாவினுடைய பெய ரென்ன ?

பு. அதுகூட வறியீரா ?—எங்கே, நீங்கள் வந்தது முதல் வீட்டிலேயே உட்கார்ந்துகொண் டிருந்தால் உங்களுக்கு எப்படித் தெரியப் போகிறது ? வீரசேன மஹாராஜ னென்று கேள்விப்பட்ட துண்டா ?

அ. ஆனல்—இந்த நாடு கோசலமோ ?

பு. ஆம்—அப்பா ! இன்றுதான் எனக்குச் சாப்பிட்டாற் போ லிருக்கிறது !— தயிர் கறிக ளென்ன ! வடாங்க ளென்ன ! கூட்டுக ளென்ன !—

ச. ஐயனே, இன்று மஹாராஜா வீட்டில் என்ன விசேஷம் ?

பு. எல்லாப் பதார்த்தங்களும் விசேஷமாகத்தா னிருந்தன.

ச. அதல்ல, எதற்காக உங்களுக் கெல்லாம் இன்றைக்கு விருந்து நடந்தது ?

பு. அதுவா? மஹாராஜாவின் ஏக புத்திரிக்கு இன்றைத் தினம் பிறந்த நாள். இவ்வளவு பிராம்மணர்களுடைய மனத்தைப் பூர்த்தி செய்யும் மஹாராஜாவுக்கு அழகமைந்த புத்திரி யமைந்தது எனக் கொரு ஆச்சரியமாகத் தோற்றவில்லை.

ச. என்ன, மஹாராஜாவின் குமாரத்தி அவ்வளவு அழகு வாய்ந்தவளோ?

பு. அழகு வாய்ந்தவளா என்ரு கேட்கிறீர்! சுந்தரி யென்ருல் அவளுக்கே தகும்.

அ. என்ன! என்ன! ராஜ குமாரத்தியின் பெயர் என்னவென்று கூறினீர்?

பு. சுந்தரி—அக் கன்னிகைக்குச் சுந்தரி யென்று பெயரிட்டது தவறு, அதி சௌந்தரி யென்றே பெயரிட்டிருக்கவேண்டும்.

ச. [அதிரூபனைத் தடுத்து] பிராம்மணோத்தமரே, இன்று தாங்கள் நன்ருய்ப் புசித்தாற்போ லிருக்கிறது?

பு. கேட்பானேன்! இனி மூன்று நாளைக்கு நான் சாப்பிடவே வேண்டியதில்லை!—அப்பா! நான் போய் சற்றுப் படுத்துக்கொண்டு புரளவேண்டும். இல்லாவிட்டால் நான் புசித்தது ஜீரணமாகாது [போகிருர்.]

அ. ஆ! ஆ! நண்பனே! இப்பொழுது என்ன சொல்லுகிருய்? நான் முன்பே கூறினேனே! சுந்தரியினுடைய முகத்தைப் பார்க்கும்பொழுதே ராஜகுமாரி என்று தெரியாதா?

ச. ஆம்!—அப்படித்தா னிருக்கவேண்டும்.

அ. என்ன சொன்னுய்? எது அப்படித்தா னிருக்க வேண்டும்? தோழா என்ன யோசிக்கிருய்?

ச. ஒன்று மில்லை—என்ன சொன்னீர்?

அ. நண்பனே, என்னுடைய இரண்டு கோரிக்கைகளில் ஒன்று நிறைவேறி விட்டது. சுந்தரி யாரென்று கண்டு பிடித்துவிட்டோம். மற்றொன்று, நான் ஊருக்குத் திரும்பிப் போவதற்குமுன் சுந்தரியைக் காணவேண்டும். அதெப்படி நிறைவேறுவது? தோழா, ஒருவனுக்கு வேண்டிய காலங்களில் உதவி செய்யத் தக்கவர்கள் உயிர் சினேகிதனைப்போல வேறெவரு மில்லை யென்று சொல்லுவார்கள். நீ யெனக்கு ராஜ குமாரத்தியைப் பார்ப்பதற்கு ஒரு வழியைச் சொல்லமாட்டுவாயா?

ச. [ஒரு புறமாக] இனி யொளிப்பதிற் பயனில்லை—ஐயனே, நீர் கூடிய சீக்கிரத்தில் ராஜ குமாரத்தியைப் பார்க்கும் படி செய்விக்கும் படியான சக்தி எனக்குத் தெய்வாதீனமாக நேரிட்டிருக்கிறது—

அ. தோழா! எப்படி? எப்படி?

ச. சொல்லுகிறேன் கேளும், அன்றைத்தினம் நீர் என்னை ஜலங்கொண்டு வரச்சொன்னீரே, ராஜாவின் தோட்டத்தில் நாம் முதலில் வழியகப்படாது சிக்கியபொழுது, ஞாபக மிருக்கிறதா?

அ. ஆம்! ஆம்! அப்புறம்—

ச. நான் தண்ணீர் கொண்டுவரச் சென்றபொழுது, ஒரு பெண்ணைக் கண்டு, காதல் கொண்டேன். அப்பொழுது அவளும் என்மீதில் காதல் கொண்டாள். அப் பெண்ணை நான் யாரென்று விசாரிக்க, தான் இவ்வூர் ராஜ குமாரியின் தோழி என்றும், தன் பெயர் சாகரிகை என்றும் கூறினள்.

அ. ஆ! ஆ! அப்படியா—

ச. பிறகு, அவளை விட்டு நான் பிரியும்பொழுது, நான் சீக்கிரம் இப் பட்டணத்தைவிட்டுச் செல்லவேண்டும் என்று சொல்ல, அவள் அவ்வாறு செய்வதற்குமுன், தன்னை இன்றிரவு ஓரிடத்தில் வந்து காணும்படியாகக் கூறி

விட்டுச் சென்ருள், அங்கு நான் பேசிக்கொண் டிருந்த படியினுற்ருன் நான் உமக்கு ஜலங் கொண்டுவர நேர மாயிற்று.

அ. ஒஹோ! தோழா! நீயும் ஓர் பெண்ணைக் கைப்பற்றி இருக்கிருற்போ லிருக்கிறது!

ச. ஐயனே, நம் மிருவருக்கும் அவ்வளவாக வித்தியாச மில்லை, நீர் ராஜ குமாரத்தியின்மீது காதல் கொண்டீர், நான் அவளுடைய தோழியின்மீது காதல் கொண்டேன், அவ்வளவே!

அ. ஆம், தோழா, அதிருக்கட்டும், சுந்தரியை நான் காண வழி சொல்லுகிறேன் என்ருயே.

ச. அதைத்தான் சொல்ல வந்தேன், கேளும்; புரோஹிதர் இந் நகரத்தை யாளும் வீரசேன மஹாராஜனுக்கு ஒரே பெண்ணென்றும், அப் பெண்தான் சுந்தரியென்றும் கூறினு ரல்லவா? ஆதலால் சாகரிகை சுந்தரியின் தோழி யென்பதற்கு சந்தேகமே யில்லை. ஆகவே, இன்றிரவு நான் சாகரிகையைக் காணும்பொழுது, நீர் எப்படி யாவது சுந்தரியை நேரில் காணும்படி அவளைக்கொண்டு செய்விக்கிறேன். சுந்தரியும் உம்மீது காதல்கொண் டிருக்கிரு ளன்ருே?

அ. ஆ! தோழா! இது நல்ல யுக்திதான்! எப்படியாவது நான் என் காதலியைக் காணும்படிச் செய்விப்பை யாயின் எனக்கு உயிரளித்தா யாவாய்!

ச. ஐயனே, நான் இதுவரையில் இவ் விஷயங்களெல்லாம் உமக்குக் கூரும லிருந்ததை மன்னிக்கவேண்டும். எங்கு என்னைப் பார்த்து நகைக்கிறீரோ வென்று இதுவரையில் பேசாதிருந்தேன்.

அ. அதனு லொன்று மில்லை தோழா, எப்படியாவது இந்த உதவி மாத்திரம் நீ எனக்குச் செய்யவேண்டும்.

ச. ஐயனே, உள்ளே சென்று இன்னும் மற்ற சமாசாரங்களை பிராம்மணரிடமிருந்து விசாரித் தறிவோம், வாரும்.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

## ஆறும் காட்சி

இடம்—அரசன் அரண்மனையைச் சார்ந்த நந்தவனத்தில் ஓர் இருண்ட இடம்.

சாகரிகை வருகிறாள்.

சா. இவ்விடத்திற் றானே அவரை வரச் சொன்னோம்? இரவு பதினைந்து நாழிகையா யிருக்கும். இன்றைத்தினம் பௌர்ணமியா யிருந்தும் கருக் கிருட்டா யிருப்பானேன்? ஒஹோ! சந்திரன் மேகங்களால் மறைக்கப் பட்டிருக்கிறது; அதனாற்றான் இங்கு இருட்டாக விருக்கிறது.— ஒஹோ! நம்முடைய காதலர் அதோ வருகிறார். இங்கு நான் பதுங்கி யிருந்து இவர் என்ன செய்கிறாரென்று கண்டறிகிறேன்.

[ஒருபுறமாய் ஒளிந்துக் கொள்ளுகிறாள்.]

சத்யவந்தன் வருகிறான்.

ச. என்ன இருட்டா யிருக்கிறது! வழியோ தெரிய வில்லை, ஆயினும் சாகரிகை இங்குதான் என்னை வந்திருக்கும் படிச் சொன்னாள். [உட்காருகிறான்.]
பதினைந்து நாழிகையாகி நெடு நேரமாகி விட்டது. இன்னும் சாகரிகை ஏன் வரவில்லை? ஒருவேளை நான் கூறியதை மறந்து விட்டனளோ? அல்லது என்மீதிருந்த காதல் குன்றினளோ? ஒ! அவ்வா றிராது. என் காதலி என்னை யன்றி வேறொருவரையும் விரும்பாள். எப்படியும் இங்கு வருவாள், ஏதோ வழியில் அசந்

தர்ப்பம் நேரிட்டிருக்கவேண்டும் அவ்வளவே.—அல்லது, இருட்டில் வழி யகப்படாது வருந்துகிருளோ என்னமோ? ஆ! சந்திரனை இதுவரையில் மறைத்திருந்த கருமேகமானது நீங்கியது! ஆஹா எவ்வள வழகாகச் சந்திரன் ஒளி வீசுகிருன்! இனி என் காதலி சீக்கிரத்தில் வழியைக் கண்டுபிடித்துக்கொண்டு என்னிடம் வந்துவிடுவாள்—இதென்ன! குளிர்ச்சி பொருந்திய சந்திர கிரணம் என்மீது படுவதினுல் என்னுடம்பு வெப்பமடைகிறதே! காதல் கொண்டவர்களுக்கு மதி விரோதி யென்பதி னுண்மையை இப்பொழுதுதான் கண்டேன்! ஐயோ! சந்திரா, ஏன் என்னைத் தஹிக்கிருய்? நான் உனக் கென்ன அபராதம் செய்தேன்? என் பகைவனுகிய மதன் உன்னையும் இத் தென்றலையும் என்னை வருத்த அனுப்பித்தானே? சற்றுப் பொறுங்கள்! என் காதலி வரட்டும்; அப்பொழுது உங்கள் கர்வத்தை யெல்லாம் அடக்குகிறேன்!—என்ன, இவ்வளவு நேரமாயும் சாகரிகை வரக் காணுமே! அவள் வருவாளோ? ஒருவேளை வராம லிருப்பாளோ? என் துயரத்தை அவள் அறியாளோ? என் தாபத்தை அவள் சற்று தணியாளோ?

[சாகரிகை பின்புறமாக வந்து அவன் கண்களைப் பொத்துகிருள்.]

ஓஹோ! சாகரிகா! என் காதலியே, உன்னை யறிவேன்! அறிவேன்! மாரா! இனி உன் பகை வெல்லாது, என் காதலி என்னிடம் வந்துவிட்டாள். [அவள் கரத்தை விலக்கி] என் காதற்கிளியே, ஏன் இவ்வளவு நேரமாயது? ஏன் நிற்கிருய்? என தருகில் உட்காருவாய்.

சா. பிராணநாதா, உமது கண்களை மூடியது நான்தான் என்று உமக் கெப்படித் தெரியும்?

ச. கண்ணே, உன் கைகள் என் மேனியில் பட்ட மாத்திரத்தில் என் அங்கமெல்லாம் சில்லென்று குளிர்ந்துவிட்டது.

வேறு யாருடைய கரம் பட்டால் அவ்வாறு குளிரப் போகிறது ?

சா. அதிருக்கட்டும், பிராணநாதா, நீர் ஊருக்கு சீக்கிரத்திற் போகவேண்டும் என்றீரே, எப்பொழுது போகிறீர் ?

ச. கண்ணே, இன்னும் கொஞ்ச நாட்களுக்குள்ளாக நான் போகமாட்டேன்—சாகரிகா, உன்னுடைய தலைவியின் பெய ரென்ன ? அவள் யார் ?

சா. அதை யேன் கேட்கிறீர் ?

ச. ஒரு காரணம்பற்றிக் கேட்கிறேன், சொல்.

சா. என் தலைவி வீரசேன மஹாராஜாவினுடைய பெண்ணென்று முன்பே கூறினேனே, அவள் பெயர் சுந்தரி, பிராணநாதா, ஏன் அதை வினவுகிறீர், என்னிடங் கூறலாகாதா ?

ச. சாகரிகா, என்மீது நீ உண்மையாகக் காதல்கொண்டிருப்பதானல் நான் உன்னை ஒன்று கேட்கப் போகிறேன், அதற்கு நீ உடன்படவேண்டும்.

சா. பிராணநாதா, அப்படியே, அதற் கென்ன ? என்ன வேண்டுமென்றாலுங் கேளும், என் னுயிரைத் தரச் சித்தமா யிருக்கிறேன்.

ச. என் கண்மணியே, என்னுடன் எனது நண்ப ரொருவர் வந்திருக்கிறார், அவர் சுந்தரியின்மீது காதல்கொண் டிருக்கிறார். அவர் யாரென்று நீ என்னைக் கேட்க லாகாது. உங்களுடைய ராஜ குமாரத்தியை மணம் புரிந்து கொள்ளத்தக்க ஸ்திதியை யுடையவர், என்று மாத்திரம் நான் உனக்குக் கூறுவேன் ; வேறொன்றுங் கூறேன். அவர் சுந்தரியை எப்படியாவது ஒருவரு மறியாமல் பார்க்க வேண்டுமென்று விருப்பமுற் றிருக்கிறார். ஆதலால் நீ எவ்வாறாவது ஒருவரு மறியாதபடி அவர் சுந்தரியைப்

பார்க்கும்படிச் செய்விக்க வேண்டும், அதுவே நான் உன்னை வேண்டுவது.

சா. நாதா, இதுவோ அவருடைய மோதிரம்?

[ஒரு மோதிரத்தைக் காட்டுகிருள்.]

ச. ஆ! இம் மோதிரம் உனக் கெப்படி கிடைத்தது?

சா. பிராணநாதா, ஆச்சரியப்படவேண்டாம். எப்படி உம் முடைய நண்பர் சுந்தரியின்மீது காதல்கொண் டிருக் கிருரோ, அவ்வாறே சுந்தரியும் அவர்மீது காதல்கொண் டிருக்கிருள். அவள் என்னை எப்படியாவது அப் புரு ஷன் யாரென்று விசாரித்து வரச் சொன்னுள். கும் பிடப்போன தெய்வங் குறுக்கே வந்தது போலும்.

ச. கண்ணே, மிகவும் சந்தோஷ மாயிற்று. ஆயினும் எனது நண்பர் சுந்தரியை எவ்வாறு காண்பது?

சா. நான் ஒரு மார்க்கம் சொல்லுகிறேன் கேளும். உமது தோழர் ஒரு ஸ்திரீ வேடம் பூண்டு நாளைத்தினம் காலை இங்கு கார்த்துக்கொண் டிருப்பாராயின், நான் அவரை எனது தங்கை என்று கூறி, சுந்தரி யிருக்கு மிடத்திற்கு அழைத்துச் செல்லுகிறேன்.

ச. ஆம்! ஆம்! சாகரிகா, நல்ல யுக்தி கூறினுய்; அப்படியே செய்யச் சொல்லுகிறேன். கண்ணே! இப்பொழுது நீ செய்த உபகாரத்திற்குக் கைம்மாறு செய்கிறேன்.

[முத்தமிட்டு]

அதுவே நான் செய்யத் தக்கது!

சா. பிராணநாதா, இப்பொழுதாவது நீர் யாரென்று கூற லாகாதா?

ச. என் கண்ணே, அது மாத்திரம் நீ என்னைக் கேட்க லாகாது. நானும் எனது நண்பரும் எங்களுடைய பெய ரை ஒரு மாதம் வரையில் வெளியிட லாகாதென்று பிர திக்ஞை செய்து கொண்டோம்.

சா. ஆனல் சரி, பிராணநாதா, நிலவு காய்வது எவ்வளவு அழகாக இருக்கிறது கண்டீரா?

ச. சாகரிகா, நெடுநேர மாய்விட்டது. எனது நண்பருக்கு எல்லா விஷயங்களையும் நான் போய் சீக்கிரம் தெரிவிக்க வேண்டும்; எனது வரவை ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண் டிருப்பார். நான் சீக்கிரம் போகவேண்டும்.

சா. பிராணநாதா, போய் வாரும் என்னை மறக்கப் போகிறீர்!

ச. சாகரிகா, உன்னையோ நான் மறப்பேன்!

[வெவ்வேறு பக்கமாய்ப் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



# இரண்டாவது அங்கம்

## முதல் காட்சி

இடம்—வீரசேனன் வீட்டில் ஓர் சயனக் கிருஹம்.

சுந்தரி ஓர் படுக்கையின்மீது சாய்ந்துகொண் டிருக்கிருள்.

பக்கத்தில் சாசரிகை உட்கார்ந் திருக்கிருள்.

ஓர் தோழி வருகிருள்.

தோ. அம்மா, தங்களை பிதா அழைக்கிருர்.

சு. கமலா, பிதா ஏன் என்னை அழைக்கிருர் தெரியுமோ உனக்கு?

தோ. ஏன் அழைக்கிருரோ எனக்குத் தெரியாது.

சு. ஆனல் நான் சீக்கிரம் வருவதாகச் சொல், போ.

தோ. அப்படியே அம்மா. [போகிருள்.]

சு. நா மிருவரும் பேசிக்கொண் டிருக்கும்பொழுது நடுவில் வந்து இவள் கெடுத்தாள்—ஆனல், சாகரிகா, நீ முன்பு கூறியது உண்மைதானு? எனது பிராணநாதரை நான் இப்பொழுது காண்பேனே?

சா. ஆம், அதற்குச் சற்றேனுந் தடை யில்லை. இப்பொழுதே வெகு சீக்கிரத்தில் காண்பாய்.

சு. சாகரிகா, நீ என்ன கூறினபோதிலும் எனக்கு மாத்திரம் சந்தேகமாகவே யிருக்கிறது; அவரை நேரில் காணுமளவும் எனக்கு அப்படியே யிருக்கும். அவர் இவ்வளவு காவல் அமைந்த நம தரண்மனை அந்தப்புரத்திற்குள் எவ்வாறு வரப் போகிருர்?

சா. சுந்தரி, நீ யதைக் குறித்து கவலைப்பட வேண்டியதில்லை. நான் அதற்கெல்லாம் ஓர் யுக்தி செய்து வைத்திருக்கிறேன். நீ யவர்மீது காதல்கொண் டிருப்பதைவிட

அவர் உன்மீது அதிகமாகக் காதல்கொண் டிருக்கிறார். எப்படியும் தவறாமல் இங்கு வருவதாக என்னிடம் நேரில் கூறி யிருக்கிறார்.

சு. அப்படியா! ஆனால் நீ யவரை நேரில் கண்டாயோ?

சா. ஆம், நேற்றைத்தினம் நான் கண்டேன்.

சு. ஆனால் அவர் யாரென்று கேட் டறிந்தாயா?

சா. தான் ஒரு சபதஞ் செய்திருப்பதாயும், அதனால் தன்னுடைய பெயரை வெளியிடலாகாதென்றும் கூறினார். ஆயினும் அவர் ஓர் சிறந்த ராஜபுத்திர னென்பதற்குக் கிஞ்சித்தேனும் சந்தேக மில்லை. அவர் அழகை நோக்கும்போதே அது வெளியாகிறது. அவருடைய சுந்தரத்தைப் பற்றி நீ என்னிடம் முன்பு கூறியதவ்வளவும் உண்மையே! அவருடைய அழகை நான் என்னென்று புகழ்வேன்! அந்த ராஜ குமார னழகை என்னால் வர்ணிக்க முடியாது—ஓகோ! சுந்தரி சந்தோஷத்தினால் மெய் மறந்தாள்போ லிருக்கிறது. இதுதான் நமக்கு நல்ல சமயம். நான் வெளியே சென்று சுந்தரியின் காதலனை இங்கு அனுப்பிவிட்டு என் காதல னிருக்குமிடம் நான் செல்லுகிறேன். [போகிறாள்.]

சற்று பொறுத்து அதிரூபன் ஸ்திரீ வேடம்பூண்டு வருகிறான்.

அ. இந்த இடத்தைக் கண்டு பிடிக்க எவ்வளவு கஷ்டப்பட வேண்டியதாயிற்று. இனி நான் இவ் வேஷத்தைக் களைந்து விடலாம்—

[முகத்தை மூடியிருக்கும் வஸ்திரத்தைக் களைந்து விடுகிறான்.]

ஆ! இங்கு படுத் துறங்கும்படியான இச் சிறந்த ரூபவதி தானோ என் காதலி?— ஆம்! அதற்குச் சந்தேகம் என்ன! என் காதலி அன்றி வேறு எந்த ஸ்திரீ, இப் பூலோகத்தில் இவ்வளவு அழகு வாய்ந்தவளாக இருக்கப் போகிறாள்? இப் பெண்மணி, சுந்தரி என்பதற்குத்

தடை யில்லை? இதோ என்னுடைய மோதிரத்தை தன் கை விரலி லணிந்திருக்கிருள். இன்று நான் இம் மாது சிரோமணியை என் கண்களால் காணப்பெற்றது எனது பூர்வ ஜன்மங்களின் பலனேயாம். இன்றே நான் இப் புவியிற் பிறந்ததின் பலனைப் பெற்றேன். இன்றே என்னுடைய ஜன்மம் சபல மாயது. இவளுடைய ரூப லாவண்யங்களைப் பார்த்துக்கொண்டே இப்படியே என்னுடைய ஆயுளை யெல்லாம் கழிக்கலாம்போலத் தோற்றுகிறதே. நல்லது, சுந்தரியை இப்பொழுது எழுப்பலாமோ? அதற்கு முன்பாகக் கோவைக் கனியைவென்ற இவளுடைய வாய்க்கு ஒரு முத்தங் கொடுக்கிறேன்.

[முத்த மிடுகிருன்.]

ஆஹா! இச் சுகத்தை நானென்னென்று சொல்வேன்! எவ்வாறு தேவாமிருதத்தை ஒருகால் உண்டவர்கள் மறுபடியும் மறுபடியும் அதையே உண்ண விரும்புவார்களோ, அவ்வாறே சுந்தரியை ஒருகால் முத்தமிட, மறுபடியும் மறுபடியும் முத்தமிட எனக்கு ஆவல் பெருகுகிறதே!

[மறுபடியும் முத்தமிட, சுந்தரி விழித்துக் கொள்கிருள்.]

அ. காதற் கிளியே! ஏன் ஆச்சரியப்படுகிருய்? என்னை நீ யறியாயோ? ஐயோ! நிற்பதினுல் உன் மலர்போன்ற பாதங்கள் வருந்தும். என்மீது கருணை புரிந்து இங்கு உட்காருவாய்—

[சுந்தரி, ஒருபுறமாய் நாணத்துடன் உட்காருகிருள்.]

எனதாருயிர்க் கற்பகமே! இன்றுதான் என்னுடைய ஜன்மம் புனிதமாயது! நான் இச் சுகத்தைப் பெற என்ன பாக்கியம் பண்ணினேனே! நானும் என்னுடைய முன்னேர்களும் பூர்வ ஜன்மங்களில் பண்ணிய புண்ணியத்தின் பயனே இன்று நான் உன்னைக் காணப் பெற்றது! கண்ணே, ஏன் முகம் குனிந்திருக்கிருய்? உன் மதியைவென்ற வதனத்தை நான் நன்ருய்க் காண லாகாதோ?

சு. பிராணநாதா, நீர் இவ்வளவு காவலுள்ள அந்தப்புரத்திற்குள்ளாக எப்படி வந்தீர்? உம்மை இங்கு யாராவது கண்டால் உமக்குப் பெருந் தீங்கு நேரிடுமே?

அ. என தாசைக் கிளியே, உனது தோழி சாகரிகையினது உதவியைக் கொண்டு மாறுவேடம் பூண்டு இங்கு வந்தேன், இனி எனக்கு என்ன தீங்கு நேர்ந்தா லென்ன? இங்கு வந்தேன், உன்னைக் கண்டேன், என் கவலைத் தீர்ந்தேன்? இனிமேல் என்ன துன்பம் நேரிட்டாலும் பெரிதல்ல. உன் காதலைப் பெற்ற எனக்கு இனி துன்பமும் இன்பமும் ஒன்றே.

சு. பிராணநாதா, உமக்கு ஏதாவது தீங்கு நேரிடுமாயின் அதனை நா னெவ்வாறு சகிப்பேன்? அதிருக்கட்டும். தாங்கள் யார் என்று அறிய நான் மிகவும் ஆவல் கொண்டிருக்கிறேன். தம்முடைய காதலர் இன்னாரென்று அறிய விரும்புவது பெண்களுக் கியற்கை யன்றோ? ஆதலால் எப்படியும் அதனை எனக்குத் தெரிவிக்கவேண்டும்.

அ. [ஒரு புறமாக] ஐயோ! இந்த தர்ம சங்கடத்திற்கு நான் என்ன செய்வேன்?—பெண்கள்நாயகமே! என்னை எப்படியாவது மன்னிக்கவேண்டும். நான் எனது நண்பனுடன் ஓர் சபதஞ் செய்திருக்கிறேன். அச்சபதப்படி எனது பெயரை இன்னும் சிலகாலம் வரையில் ஒருவருக்கும் வெளியிடலாகாது; ஆயினும், நான் உன்னை மணம்புரியத் தகுந்த ஸ்திதியி லிருப்பவனென்று மாத்திரம் கூற என்னால் முடியும். அவ்வளவே! உன்னை நான் இரந்து வேண்டுகிறேன். உனது கேள்விக்கு விடை யளியாத இப் பிழையை மாத்திரம் நீ என்மீது அருள் புரிந்து மன்னிக்கவேண்டும்.

சு. பிராணநாதா, ஆனால் சீக்கிரம் பிதாவினிடஞ் சென்று உமக்கு என்னை மணம்புரிவிக்கும்படி கேட்க லாகாதா? ஏனெனில்—

அ. ஐயோ! நான் முன்பே கூறினேனே! அச் சபதப்படி நான் ஒருவரிடமும் இன்னுனென்று வெளியிடலாகாதே! உன்னுடைய பிதாவிற்கு என்னுடைய பெயரைக் கூறுது உன்னை எனக்கு மணம் புரிவிக்கும்படி எவ்வாறு நான் கேட்பது?

சு. அதைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது, ஆயினும் என்னைச் சீக்கிரம் நீர் மணம் புரியாவிட்டால் நீர் என்னை இழப்பீர், நானும் உம்மை யிழப்பேன்; ஆதலால் பிராண நாதா, என்மீது நீர் காதல்கொண்டிருப்பது உண்மை யாயின் நான் கூறியபடி செய்வீர்!

அ. ஐயோ! கண்ணே! இந்த தர்ம சங்கடத்திற்கு நான் என் செய்வேன்? நான் என்னுடைய வாக்கால் கட்டுண் டிருக் கிறேனே!—ஆயினும் உன்மீது நான் காதல்கொண் டிருக்கிறே னென்பதற்குச் சற்றேனுஞ் சந்தேக மில்லை யென்று நீயே யறியாயோ! இதோ, ஆகாயவாணி பூமி தேவி யறியக் கூறுகிறேன். உன்னையன்றி யிதுவரையில் ஒரு ஸ்திரீயையும் நான் முகமெடுத்துப் பார்த்ததும் இல்லை, இனி பார்க்கப்போகிறது மில்லை. உன்னை யன்றி வேறெந்த ஸ்திரீயையும் நான் மணம் புரியேன். இது சத்தியம்! சத்தியம்!

சு. பிராணநாதா, நானும் கூறுகிறேன் கேளும். உம்மை யன்றி வேறெந்தப் புருஷனையும் நான் விவாகஞ் செய்து கொள்ளேன், இது உண்மை.

அ. சுந்தரி, நீ இப்பொழுது கூறிய ஒவ்வொரு மொழியும் எனது உடலை தேவாமிர்தம்போல் குளிரச் செய்தது. இதற்குக் கைம்மாறு நான் என்ன செய்யப்போகிறேன்! இதோ உனது பவளவாய்க் கொரு முத்த மிடுகிறேன்.

[முத்தமிடுகிருன். அச்சமயம் மித்திர வசு வருகிருன்.]

மி. ஆ! ஆ! அப்படியா சமாசாரம்!

[வெளியே விரைந்து போகிருன்.]

சு. பிராணநாதா! ஐயோ! நான் என்ன சொல்லப்போகிறேன்! நீர் இவ்விடத்தை விட்டுச் சீக்கிரத்தில் தப்பிஓடித் துச் செல்லவேண்டும்! நீர் இங்கு இனி ஒரு க்ஷணப் போதேனும் இருப்பீராயின் உமக்கு சிரசாக்ஞை நேரிடுமென்பதற்கு ஐய மில்லை! ஐயோ நானென் செய்வேன்!

அ. சுந்தரி, என்ன, என்ன விசேஷம்?

சு. ஐயோ! சற்று முன்பாக நீர் என்னைச் சீக்கிரம் மணம் புரியாவிடில் என்னை இழப்பீ ரென்று கூறினே னல்லவா? அதற்குக் காரணம், என்னுடைய பிதாவானவர் இப்பொழுது இங்கு நம்மைக் கண்டு கோபித்துச் சென்ற மித்திரவசு வென்னும் ராஜகுமாரனுக்கு என்னை விவாகஞ் செய்து கொடுக்க எண்ணி யிருக்கிறார் என்பதேயாம். இம் மித்திரவசுவோ மிகவுங் கொடியவன். நா மிருவரும் ஒரே ஆசனத்தில் உட்கார்ந் திருந்ததைப் பார்த்து விட்டான். எப்படியும் என் பிதாவிடம் சீக்கிரத்தில் இவ் விஷயத்தை வெளியிடுவான். பிதா இங்கு உம்மைக் காண்பாராயின் எப்படியும் உம்மைச் சிரச்சேதம் செய்துவிடும்படியாகக் கட்டளை யிடுவார். ஆதலால் பிராணநாதா, தாம் இனி ஒரு க்ஷணமும் இங்கிருக்க லாகாது. வந்த வழியாகவே சீக்கிரம் வெளியே போய்விடும்!

சா. [உள்ளிருந்து] அம்மா! சுந்தரீ! எங்கு இருக்கிறாய்? பிதா உன்னைத் தேடி வருகிறாரே.

சு. ஓஹோ! பிதா வந்துவிட்டார்! சாகரிகா எச்சரிக்கிறாள். பிராணநாதா! சீக்கிரம் போய்விடும்.

அ. கண்ணே, அப்படியே போய்விடுகிறேன்.

[வெளியே போகிறான்.]

மற்றொரு புறமிருந்து வீரசேனனும் மித்திரவசுவும் சாகரிகையும் வருகிறார்கள்.

வீ. என்ன, மித்திரவசு! இங்கு ஒருவரையுங் காணோமே.

மி. நாம் வருவ தறிந்து அவன் வெளியே போய்விட்டான் போ லிருக்கிறது. நான் என் இரண்டு கண்களால் சற்று முன்பாகக் கண்டேனே! இதிற் சற்றேனும் பொய் யில்லை. உம்முடைய குமாரத்தியை நீரே கேளும்.

வீ. ஆம்! ஆம்! உண்மையாகத்தா னிருக்கவேண்டும். நானும் வரும்பொழுது பேச்சரவங் கேட்டேன் [உட்கார்ந்து] சுந்தரி! இது என்ன இது?

சு. என்ன அண்ணு?

வீ. ஓஹோ! இந்தப் பூனையும் பால் குடிக்குமா என்று ஒன்றுந் தெரியாதவள் போலே கேட்கிறுற்போ லிருக் கிறது! யார் இங்கு இதுவரையில் வந்திருந்தது?— என்ன, நான் கேட்பதற்குப் பதில் கூருதிருக்கிருய்?

சா. [ஒரு புறமாக] கண்ணே, உண்மையைக் கூறிவிடு.

வீ. ஆஹா! என்னுடைய மகளாகப் பிறந்த நீ, இவ்வளவு துர் நடத்தையுடையவளாக இருக்கிறு யல்லவா? இப் பொழுது ஆதியோடந்தமாக நீ எல்லாவற்றையும் உண்மையாகக் கூருவிடில், நீ என்னுடைய மகளென்றும் பாராமல், உடைவாளினுல் ஒரே வெட்டாக வெட்டிவிடு வேன்! உண்மையைச் சொல்லிவிடு!

சு. [பாதத்தில் வீழ்ந்து] தந்தையே! தந்தையே! நீர் என்மீது இவ்வளவு கோபங் கொள்ளலாகாது. நீர் நினைத்திருக் கும்படியான அம்மாதிரியான குற்றம் ஒன்றும் நான் செய்தவ ளல்ல.

வீ. அதெல்லா மிருக்கட்டும், இங்கு இதுவரையில் இருந் தது யார்? ஒளிக்காதே! ஜாக்கிரதை!

சு. ஐயனே! நான் உண்மையைக் கூறுகிறேன். என்மீது தாங்கள் அருள் புரியவேண்டும். இங்கு வந்தவர் ஒரு புருஷன்தான், ஆயினும் அவர் யாரென்று எனக்குத் தெரியாது.

வீ. ஆஹா ! சுந்தரீ ! எனது கோபமானது மூண்டெரிகிறது. அதனை விர்த்தி செய்யாதே ! ஜாக்கிரதை ! பொய்யுரைக்காதே ! என்னை புத்தியற்றவனென்று கருதினையோ ! இவ்வளவு காவலமைந்த எனது அரண்மனையின் அந்தப்புரத்தில், உன்னிடம் வந்த ஒரு புருஷன், உனது அனுமதியின்றி வந்திருப்பானு ? அவனுக்கும் உனக்கும் முன்பே பழக்கமில்லா திருக்குமா ? அவனை இன்னுனென்று நீ அறியா திருப்பாயா ? நான் பலதரம் உன்னைக் கேட்கமாட்டேன் ! உண்மையைக் கூறிவிடு.

சு. அண்ணு ! என்மீது தாங்கள் தயை புரியவேண்டும். எல்லாவற்றையும் உண்மையாகக் கூறுகிறேன். இரண்டு மூன்று தினங்களுக்கு முன்பாக ஒருநாள் சாயங்காலம் நமது நந்தவனத்தில் நான் விளையாடிக்கொண் டிருக்கும் பொழுது அங்கே ஒரு மஹா புருஷன் படுத்துறங்க—நான் கண்டு—நான் கண்டு-காதல்கொண்டேன். அவரே இன்று இங்கு வந்திருந்தவர். பூந்தோட்டத்திற் கண்ட பிறகு, இப்பொழுதே மறுபடியும் நானவரைக் கண்டேன். அவர் அந்தப்புரத்துக் காவல்களை யெல்லாம் எவ்வாறு கடந்து வந்தாரோ நா னறியேன். அவரை நான் வினவியபொழுது, தான் ஓர் பிரதிக்ஞை செய்திருப்பதாயும், அதன்படி தான் சிலகாலம் வரையில், தனது உண்மையான பெயரை வெளியிடலாகாதென்றும் கூறினுர். ஆயினும் அவர் ஓர் சிறந்த ராஜகுமாரனென்பதற்கு ஐயமே யில்லை. நான் எப்படி அவர் மீது காதல்கொண் டிருக்கிறேனே, அப்படியே அவரும் என்மீது காதல்கொண் டிருக்கிருர். அதுவுமன்றித் தன் பெயரைக் கூருவிட்டபோதிலும், என்னை மணந்துக் கொள்ளத் தகுந்த ஸ்திதியிலேயேதான் இருப்பதாகக் கூறினுர். அண்ணு, இதுவே யுண்மை ! எப்படியாயினும் அம் மஹா புருஷனைக் கண்டு பிடித்து, இன்னுரென்றறிந்து, தாங்கள் என்னை அவருக்கு மணம் புரிவிக்க வேண்டும்.

வீ. ஆஹா! சுந்தரீ! எரிகின்ற கொள்ளியை ஏறத் தள்ளுகிறு யல்லவா! என்ன ஆச்சரியம்! மித்திரவசு! ஸ்திரீகளுடைய மனத்தைக் கண்டறிந்தார் ஒருவருமில்லையென்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்! ஆஹா! அதனுண்மையை நான் இன்றே கண்டேன். என்னுடைய பெண் இவ்வளவு சூதுள்ளவளென்று நான் கனவிலும் நினைத்ததில்லை! சுந்தரி! என் கட்டளையை மீறி நடந்ததுமன்றி, யாரோ ஒரு புருஷனை, நான் ஆண்பிள்ளைகள் ஒருவரும் செல்லக்கூடாது என்று கட்டளையிட்டிருக்கிற நந்தவனத்தில் கண்டதாகவும், இன்னும் இவ்விதமாக பொய்யுரைத்தது மன்றி, யாரோ ஒரு அற்பன்மீது காதல்கொண்டு, அவ் வற்பனுக்கு உன்னை விவாகஞ் செய்துகொடுக்கும்படியாக என்னையே கேட்கிறுய் அல்லவா! சுந்தரி! உன்னுடைய துர்க்குணத்தையும் தைரியத்தையும் நான் என்னென்று சொல்வேன்! ஆஹா!

மி. மஹாராஜா, எனக்கு நல்ல மரியாதை செய்துவைத்தீர்! நான் ஊருக்குத் திரும்பிப்போகிறேன் விடை தாரும்.

வீ. மித்திரவசு! அப்படியல்ல, என் பெண் தன்னையொரு அற்ப துஷ்டனுக்கு விவாகஞ்செய்து கொடுக்கும்படியாகக் கேட்டால், நான் அவ்வாறு செய்வேனே? உனக்கே எப்படியும் சுந்தரியை விவாகஞ் செய்து கொடுக்கிறேன் அவசரப்படாதே—சுந்தரீ! உன்னை எந்த துஷ்டப்பயலுக்கு விவாகஞ்செய்துகொடுக்கும்படியாகக் கேட்கிறுயோ அவனை எப்படியாவது கண்டு பிடித்து, உன் கண் முன்பாகவே பதினுயிரந் துண்டங்களாக வெட்டி வைக்காவிட்டால் நான் வீரசேன மஹாராஜனல்ல! ஒரு அற்பனிடத்திலா நீ காதல் கொள்வது?

சு. ஐயோ அவர் ஒரு அற்ப னன்லவே! அவர் ஓர் சிறந்த வம்சத்தி லுதித்த ராஜ குமார னென்பதற்குச் சந்தேகமே யில்லை. அவர் முகத்தைப் பார்க்கும்பொழுதே—

வீ. அதிகமாகப் பேசாதே! எனக்கு இன்னும் கோபம் வரும் சுந்தரீ! இன்னும் ஒரு முறைதான் உன்னை நான் கேட்பேன். என்னுடைய உத்தரவின்றி இவ் வந்தப்புரத்திற்குள் நுழைந்து உன் மனத்தைக் கவர்ந்துசென்ற அத் துஷ்டன் யார்? இப்பொழுதாவது உண்மையைக் கூறிவிடு.

சு. ஐயனே, நான் உண்மையை முன்பே கூறிவிட்டேன்; எனக்குத் தெரியாது.

வீ. இருக்கட்டும், இப்பொழுதவன் எங்கே யிருக்கிறான் தெரியுமா?

சு. அதுவுந் தெரியாது

வீ. நல்லது! அவனது அங்க மச்சம் அடையாளங்களை யாவது கூறுவாயா? என்ன சும்மா யிருக்கிறாய்? அதுவுங் கூறமாட்டாயா? நீ கூறாமற் போனாலென்ன! நான் நாளைத்தினம் சூரியன் அஸ்தமிப்பதற்குமுன் அத் துஷ்டனை எப்படியாவது கண்டு பிடித்து, என் சபதத்தை நிறைவேற்றுகிறேன் பார்: அதை நிறைவேற்றிய பிறகு, உன்னை இதோ நிற்கும் மித்திரவசுவுக்கு விவாகஞ் செய்து கொடுக்கிறேன். மறுபடியுங் கூறுகிறேன்—அப்படி நான் செய்யாவிட்டால், என்பெயர் வீரசேன ராஜனன்று—சாகரிகா, உனக்கு இவ் விஷயத்தைக் குறித்து ஏதாவது தெரியுமோ?

சா. மஹாராஜா, எனக்கு தெரியாது. அப்படி ஏதாவது தெரிந்திருக்குமாயின் உமக்கு நான் முன்பே கூறியிருக்க மாட்டேனா?

வீ. ஆம் ஆம்! உனக்கு எப்படி தெரியப் போகிறது. என்னை மோசஞ் செய்தவள் உன்னை மோசஞ் செய்வதற்குக் கேட்பானேன்.

சா. மஹாராஜா, எனக்கும் நாளைத்தினம் அத் துஷ்டனைத் தேடிக் கண்டுபிடிக்க உத்தர வளிக்கவேண்டும்.

வீ. ஆம், அப்படியே செய்வாய். மித்திரவசு, நாம் நம்முடைய சைனியங்களை நான்கு பிரிவாக வகுத்து, நாளைத்தினம் இப் பட்டணத்தின் நான்கு புறங்களிலும் தேடச் செய்யவேண்டும். நான் ஒரு பிரிவுடன் வடக்கில் செல்கிறேன். நீ தெற்கில் செல்வாய். சுந்தரி! இன்னும் உண்மையைக் கூறமாட்டாயல்லவா? நாளைத் தினம் உன் மன உறுதியைக் கலக்குகிறேன் பார்!

[சாகரிகையும் சுந்தரியும் தவிர மற்றவர்கள் போகிறார்கள்.]

சு. ஐயோ! சாகரிகா! நான் என்ன செய்வேன்? என்ன செய்வேன்? நான் அம் மஹாபுருஷன்மீது காதல்கொண்டதனால் அவருக்குப் பெருந் தீங்கு விளையும்படி செய்கிறேனே. அவருடைய உயிருக்கு நான் யமனாய் வாய்த்தேனே! என்னால் அவர் தன தருமையான உயிரை நாளைத்தினம் இழக்கப் போகிறாரே! பிதா எப்படியும் அவரைக் கண்டுபிடித்து விடுவார். பிறகு என் காதலனை பிதா செய்த சபதப்படி, என் முன்பாகக் கொல்வாராயின் அத் துயரத்தை நான் எப்படிப் பொறுப்பேன்? எப்படிப் பொறுப்பேன்?

சா. அம்மா, நீ இதற்காக வருந்தவேண்டாம். உன்னுடைய காதலரைக் காப்பாற்றுவது என் கடனாகும். என் னுயிருள்ளளவும் அவருக்கு ஒரு தீங்கும் நேரிடாது. நான் இப்பொழுதே சென்று அவரை ஒருவரு மறியாதபடி ஓரிடத்தில் பத்திரமாக இருக்கச் செய்கிறேன். அவரைக் குறித்து நீ இனி கவலைப்படவேண்டாம்.

சு. அடி சாகரிகா, உன்னையே நம்பினேன், என துயிர் உன் கையில் இருக்கிறது.

சா. சுந்தரி, நீ ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். இம் மித்திரவசுவினா லல்லவோ இவ்வளவு துயரம் நேர்ந்தது. எனக்கு ஓர் யுக்தி தோற்றுகிறது. அம் மித்திரவசுவுக்கு

தகுந்த சிக்ஷை நான் நாளைத்தினஞ் செய்துவைக்கிறேன் பார். [போகிறான்.]

காட்சி முடிகிறது.

## இரண்டாம் காட்சி

இடம்—ஓர் பாழ் மண்டபம்.

சத்யவந்தன் வருகிறான்.

ச. இம்மாதிரியான சங்கடங்கள் வருமென்றே நானிப்பட்டணத்தில் தங்கலாகாதென்று முன்பே கூறினேன். ஆயினும் எனது நண்பன் சுந்தரியின்மீது கொண்ட காதலினால் எனது வார்த்தையைக் கேளானென்றான். என் நண்பனை இப் பட்டணத்துச் சேவகர்கள் கண்டுபிடித்துவிட்டார்களானால், அவன் எப்படியும் உயிரிழக்க வேண்டிவரும்; தான் இன்னானென்று வெளியிட்டுத் தப்பித்துக் கொள்ளவும், அன்று செய்த சபதத்தினால் சுவாதீனமற்றிருக்கிறான். நான் அருகில் நின்று காப்பாற்றலாமென்றாலோ, அதுவுமாகாதபடி என்னை இங்கு அனுப்பித்துவிட்டான்; இச் சங்கடத்திற்கு நான் என்ன செய்வது ?

சாகரிகை மூட்டை யொன்றை எடுத்துக்கொண்டு விரைந்து வருகிறாள்.

சா. ஆ! பிராணநாதா ! நான் உம்மை எங்கென்று தேடுவேன்! உம்மைத் தேடித் தேடி என் கால் எல்லாம் நோவுகிறது. நான் நேற்றைத்தினம் இரவே உம்மைக் காணவேண்டுமென்றிருந்தேன். அவ்வாறு செய்ய முடியாமற் போயிற்று. உமது நண்பரெங்கே?

ச. சாகரிகா, அவரைப் பிடிக்க இப் பட்டணத்திலெங்குந் தேடுகிறார்களென்று உனக்குத் தெரியாதா? இவ் விஷயம் நான் முன்பே கேள்விப்பட்டு அவரை இப் பட்ட

ணத்திற் கருகாமையிலுள்ள ஓரிடத்தில் ஒளித்துவைத் திருக்கிறேன். இதனை நீ யாரிடமாவது சொல்லப் போகிறாய்.

சா. அதற்காகத்தான் நான் உம்மைத் தேடி வந்தது. நான் சொல்வதற்குமுன் நீரே ஜாக்கிரதை செய்துவிட்டாற் போல் இருக்கிறது. இப் பட்டணத்திற்கு வந்திருக்கும் படியான வெளியூரா ரெல்லோரையும் மஹாராஜா பிடித்து வரும்படி கட்டளையிட் டிருக்கிறாரே, நீர் என்ன செய்யப் போகிறீர்? உம்மைச் சேவகர்கள் காண்பாராயின் மஹாராஜா முன்பாகப் பிடித்துச் செல்வாரே.

ச. அதைத்தான் நானும் யோசிக்கிறேன். நானும் என் நண்பனுடன் இருக்கலா மென்றாலோ, அவர் இங்கு என்ன நடக்கிறதென்றும், தான் மறுபடியும் சுந்தரியைப் பார்ப்ப தெப்படி யென்றும் அறிந்து வரும்படியாக என்னைத் தொந்தரவு செய்தார்; நானென்ன செய்வது?

சா. [தான் கொண்டுவந்த மூட்டையை யவிழ்த்து] இதோ, உங்களிருவருக்கும் மாறு வேஷம் பூண சன்யாசிகளின் உடைகளைக் கொண்டு வந்திருக்கிறேன். நீர் இதில் ஒன்றைத் தரித்துக்கொள்ளும், அப்புறம் நான் உமக்கு ஒரு விஷயம் சொல்லுகிறேன்.

ச. கண்ணே! என்னுடைய க்ஷேமத்திற்காக நீ இவ்வளவு கஷ்ட மெடுத்துக்கொண்டதற்காக நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்.

[மூட்டையை எடுத்துக்கொண்டு ஒருபுறம் போகிறான்.]

சா. இந்த மித்திரவசுவுக்குத் தகுந்த சிக்ஷை செய்துவைத்தாலொழிய எனக்குத் திர்ப்தி யிராது. என்னை அரண்மனையிலுள்ள ஒரு தாசியென் றல்லவோ எண்ணி ஏளனம் செய்தான்!

மறுபடியும் சத்யவந்தன் சன்யாசி யுடையில் வருகிறான்.

வாருமையா சந்நியாசியாரே! உட்காரும்.

ச. ஒஹோ! சாகரிகா, நீயே யென்னைப் பரிகாசஞ் செய்கிறாற்போல் இருக்கிறது.

சா. இல்லை! இல்லை! சீக்கிரம் நான் சொல்லுகிறதைக் கேளும். இப்பொழுது மஹாராஜா சுந்தரியை மித்திரவசு வென்னும் ஒரு ராஜ குமாரனுக்கு விவாகஞ் செய்து கொடுக்கத் தீர்மானித்திருக்கிறார் என்று உமக்குத் தெரியுமே. அந்த மித்திரவசு இப்பொழுது உமது தோழனைத் தேடிக்கொண் டிருக்கிறான். சீக்கிரம் இங்கு வருவான். வந்து உம்மைக் கேட்கும்பொழுது, அவர்கள் தேடும்படியான புருஷனை நீர் பிடித்துக் கொடுப்பதாகக் கூறி, எப்படியாவது இந்தப் பைக்குள்ளாக பதுங்கியிருக்கச் செய்யும்; பைக்குள்ளாக அவன் சென்றவுடன், நன்றாயிறுக்கிக் கட்டிவிடும். நான் இரண்டு மூன்று சேவகர்களை அழைத்துக்கொண்டு, நானும் தேடுகிறதுபோல் வருகிறேன். அப்பொழுது இப் பையை என்னிடம் ஒப்புவித்து, நாங்கள் தேடும்படியான ஆள் இதற்குள்ளாக இருக்கிறா னென்றும், தான் மித்திரவசுவென்று கூறி தப்பித்துக்கொண்டு போகப் பார்க்கிறானென்றும் கூறிவிடும், மற்ற விஷயங்களை யெல்லாம் பிறகு நான் பார்த்துக் கொள்ளுகிறேன்.

ச. ஒஹோ! சாகரிகா! உன் எண்ணத்தை யறிந்தேன், அறிந்தேன். இதுவும் நல்ல யோசனைதான்! அப்படியே செய்கிறேன். அம் மித்திரவசுவினா லல்லவோ இவ்வளவு கஷ்டம் நமக்கு நேர்ந்தது. இருக்கட்டும்.—

மி. [திரைக்குள்] அடே! சீக்கிரம் வாருங்கள்.

சா. ஒஹோ! இதோ வந்து விட்டான் மித்திரவசு. ஜாக்கிரதை! நான் ஒளித்துக்கொண் டிருக்கிறேன்.

[ஒளித்துக் கொள்ளுகிறாள்.]

மித்திரவசு வருகிறான்.

ச. யாரப்பா, அது?

மி. ஐயா, சன்யாசியாரே, இந்த வீட்டில் யாராவது அன்ய தேசத்தார் வந்திருக்கிறார்களா?

ச. [சைகை செய்து] அப்பா, இங்கு அருகில் வா; உறக்கப் பேசாதே. சேவகர்களெல்லாம் ஒரு மனிதனைத் தேடுகிற தாகக் கேள்விப்பட்டேன். அவனையா நீயும் தேடுகிறாய்? அவனை நான் பிடித்து உன்னிடம் ஒப்புவித்தால் எனக்கு என்ன தருகிறாய்?

மி. என்ன! என்ன! அவன் எங்கிருக்கிறானென்று உமக்குத் தெரியுமோ! ஐயா சன்யாசி, நீர் எப்படியாவது அத் துஷ்டனை என்னிடம் பிடித்துக் கொடுத்தால் உமக்கு ஆயிரம் பொன் தருகிறேன்.

ச. அப்படியே செய்கிறேன். ஆனால் நான் சொல்லுகிறபடி நீ செய்யவேண்டும். சற்று நேரத்திற்குள்ளாக அவன் இங்கு வருவான். அப்பொழுது நீ இங்கு எங்காவது பதுங்கியிருந்து, அவன் பேசுகிறதையெல்லாம் கேட்டுக் கொண்டிரு. அப்புறம் நான் ஒரு சைகை செய்கிறேன், உடனே நீ அவனறியாதபடி இவ் வழியாக வெளியே சென்று, சேவகர்களை அழைத்துக்கொண்டு வந்து, அவனைப் பிடித்துக்கொள்.

மி. ஆமாம், இது நல்ல யோசனை, அப்படியே செய்கிறேன்.

ச. இதோ அவன் வரும் வேளையாகிவிட்டது. இங்கே நீ பதுங்கி யிருக்க ஒன்றையுங் காணேமே! இந்த பைக் குள்ளாகவாவது புகுந்துகொள், மூடிவிடுகிறேன்.

[மித்திரவசு பைக்குள்ளாக நுழைய, சத்யவந்தன் கட்டிவிடுகிறான்.]

மி. என்ன ஐயா! கட்டியா விடுகிறீர்?

ச. இல்லை இல்லை, நன்றாக மூடிவிடுகிறேன்.

மறுபடியும் சாகரிகை வருகிறாள்.

சா. நன்றாகச்செய்தீர்! நான் சென்று சேவகர்களை அழைத்து வருகிறேன். [வெளியே போகிறாள்.]

ச. ஆஹா! இப்படியல்லவோ அகப்பட்டுக் கொள்ளவேண்டும்.

மறுபடியும் சாகரிகை நான்கு சேவகர்களுடன்
வருகிருள்.

சா. ஐயா சன்யாசி, எங்கே பிடித்துத் தருகிறே னென்றீரே?

ச. இதோ கோணிப் பையி லடைத்து வைத்திருக்கிறேன்; நான் வீசிய வலையி லகப்பட்டுக் கொண்டான்; இனி நீங்கள் மஹாராஜாவிடம் எடுத்துச் செல்லலாம்; நான் அப்புறம் வருகிறேன்.

சா. சேவகர்களே, இந்தப் பையி லகப்பட்டுக்கொண் டிருக்கிருன் இவ்வளவு நேரம் நாமெல்லாம் தேடியு மகப்படாத துஷ்டன். அப்படியே யெடுத்துக் கொள்ளுங்கள், போவோம் மஹாராஜாவிடம். மஹாராஜாவிடஞ் சொல்லித் தக்க வெகுமதி உங்களுக்கு கொடுக்கச் சொல்லுகிறேன்.

சே. ஆஹா! அகப்பட்டுக்கொண்டான் திருடன். அடே அண்ணே, தூக்கடா தூக்கு! [அப்படியே தூக்குகிருர்கள்.]

மி. [உள்ளிருந்து] ஐயா, சன்யாசி நேரமாய்விட்டதே. எனக்கு மூச்சுவிடக் கூடவில்லேயே. கொஞ்சம் அவிழ்த்து விடும்.

சே. அவுத்தா விடவேணும்! குட்ரு ரெண்டு கல்தா!
[புடைக்கின்றனர்.]

ச. அப்பா, இவனே ஜாக்கிரதையாக எடுத்துச் செல்லுங்கள். இவன்தான் மித்திரவசுவென்று கூறி தப்பித்துக் கொள்ளப் பார்க்கிருன். அவிழ்த்துவிடப் போகிறீர்கள்! பத்திரம்!

சே. இவனேயா அவுத்து விடுவோம்! இவனு மித்திரவசு? அவரு அங்கே யிருக்கிருரே! இங்கே எப்போ வந்தாரு? இவன் மித்திரவசு பாட்டெ இண்ணைக்காகூட, அவுத்து விட மாட்டோமே!

மி. [உள்ளிருந்து] ஐஐயோ! சன்யாசி! நான்தான் மித்திரவசு!

ச. பார்த்துக் கொண்டீரா! இப்பொழுதே சொல்லுகிருன்.

சா. அடே அவன் கூறுவதை ஒன்றுங் கேட்கவேண்டாம், சீக்கிரம் எடுத்து வாருங்கள்.

மி. ஐயோ! ஐயோ! நான் மித்திரவசுவாச்சே, என்னை எங்கே தூக்கிக்கொண்டு போகிறீர்கள்? ஐயா! ஐயா! சன்யாசி!

ச. நீங்கள் போய் வாருங்கள். நான் அப்புறம் வருகிறேன் மஹாராஜாவிடம்.

[மித்திரவசு உள்ளேகூவிக்கொண்டிருக்க, சேவகர்கள் பையுடன் தூக்கிக்கொண்டு போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

## மூன்றாம் காட்சி

இடம்—வீரசேனன் அரண்மனையில் ஓர் மண்டபம்.

சுந்தரியும் சாகரிகையும் உட்கார்ந்திருக்கின்றனர்.

சு. தோழி, நீ கூறியது உண்மைதானா?

சா. அவ்வளவும் உண்மைதானம்மா! அக் கோணிப் பைக்குள்ளாக இருப்பவன் மித்திரவசுதான். பிதா வந்தவுடன் எல்லாம் வெளியாகிறது பாரும். அப்பொழுது சிரிக்கப் போகிறீர்! ஜாக்கிரதையாயிரும்.

வீரசேன மஹாராஜன் வருகிறார்.

வீ. சாகரிகா, எஙகே? அத் துஷ்டனை நீ பிடித்து வந்திருக்கிறாயாமே! என்னமாகப் பிடித்தாய்?

சா. மஹாராஜா, நான் சென்று கிழக்கில் தேடும்பொழுது, அங்கொரு சன்யாசியைக் கண்டு வினவ, அவர் ரகசியமாய் என்னை யழைத்து, தேடப்படியானவன் அவருக்குத் தெரியு மென்றும், ஆயிரம் பொன் கொடுத்தால் எனக்குக் காட்டிக் கொடுப்பதாகவும், கூறினார் நான்

அதற்கு இசைய என்னை இரண்டு மூன்று சேவகர்களை அழைத்துவரச் சொன்னார். நான் அப்படியே அழைத்துக்கொண்டு மறுபடியும் அவரிருக்குமிடத்திற்குச் செல்ல, அவர் ஒரு கோணிப் பையைக் கொடுத்து, அதில் அவனை ஏமாத்தித் தான் பிடித்துவிட்டதாகக் கூறினார். உடனே அப் பையை சேவகர்கள் தலையி லெடுப்பித்துக்கொண்டு வந்தேன்.

வீ. அந்த சன்யாசி எங்கே ?

சா. தான் பின்பு வருவதாகக் கூறினார்.

வீ. சாகரிகா, உன் திறமைக்கு மெச்சினேன் ; அந்த பையை ஜாக்கிரதையாக எடுத்துவரச் சொல்.

[சாகரிகை போகிறாள்.]

வீ. ஆஹா ! சுந்தரி ! இப்பொழுது என்ன சொல்லுகிறாய் ? உன் காதலன் என் கையி லகப்பட்டுவிட்டான். எனது சபதத்தை நிறைவேற்றிவிட்டேன் பார்த்தாயா ? இதோ சீக்கிரத்தில் உன் காதலனை உன் கண் முன்பாகக் காண்பாய் ; உனக்கெதிராகவே, எந்த புருஷன்மீது என் கட்டளையை மீறி நீ காதல் கொண்டாயோ அவனை ஆயிரந் துண்டங்களாக வெட்டும்படிக் கட்டளை யிடுகிறேன் பார்.

சாகரிகை மறுபடியும் வருகிறாள், நான்கு சேவகர்கள் மித்திரவசு உள்ள கோணிப்பையைத் தூக்கிக்கொண்டு வருகிறார்கள்.

அடே என் முன்பாக இப் பையைப் போடுங்கள்.

மி. மெல்ல ! மெல்ல !

[சேவகர்கள் பையை கீழே வைக்கிறார்கள்.]

வீ. இக் கொடியவனைத் தண்டிக்கும்பொழுது மித்திரவசுவும் நம்முடன் இருக்கவேண்டும், சேவகா, மித்திரவசு எங்கே ?

மி. ஐயோ ! ஐயோ ! நான்தானே மித்திரவசு !

சே. சாமி! இந்தத் திருடன் முன்னேயேம் புடிச்சி, நான்தான் மித்திரவசு ராஜா, இன்னு சொல்லிகினே இருக்கிரா. அவரு அங்கே தேடிகினு இருக்கிருரே!—

வீ. அப்படியா! சீக்கிரம் போய் நா னழைத்ததாகக் கையுடனே இட்டுக்கொண்டுவா.

சே. அப்படியே சாமி. [ஒருவன் போகிருன்.]

வீ அடே துஷ்டா! நீ என்னுடைய நந்தவனத்துக்குள் நுழைந்து எனது குமாரத்தியை வசியஞ் செய்துச் சென்ருயல்லவா? அதுவுமன்றி நான் வைத்த காவல்களை யெல்லாம் கடந்து என் உத்தரவின்றி அந்தப்புரத்திற்குள்ளும் நுழைந்தா யல்லவா? அற்பனுகிய நீ என் குமாரத்தியை மணம் புரியப் பார்த்தாயல்லவா? சீ! உன்னை உதைக்கிறேன் துஷ்டனே! சுந்தரி! இதோ பார் உன் காதலனை உதைக்கிறேன். [பையை உதைக்கிருர்.]

மி. ஐயோ! ஐயோ! இதென்னடா இது, ஏனையா என்னை உதைக்கிறீர்?

வீ. சுந்தரீ! என் சபதத்தை நிறைவேற்றுகிறேன் பார். அடே சேவகர்களே! இப் பையை மெல்ல அவிழ்த்து இவனை மெல்ல வெளியே உறுதியாகப் பிடித்து நிறுத்துங்கள். இத் துஷ்டனுடைய முகத்தை நான் பார்த்து யாரென்றறியவேண்டும்.

[சேவகர்கள் பையைத் திறக்க மித்திரவசு வெளியே வருகிருன்.]

மித்திரவசு!

மி. ஐயா! மஹாராஜா! போதும் போதும்! உம்முடைய பெண்ணைக் கலியாணஞ் செய்ய வந்ததற்குக் கோணிப்பையி லடைப்பித்து, உம்முடைய சேவகர்களால் உதைப்பித்தது போதும் போதும்! நான் எனது நாட்டிற்குப் போய் வருகிறேன். உம்முடைய பெண்ணும் வேண்டாம், கோணிப்பையும் வேண்டாம், உம்முடைய சேவகர்களது உதையும் வேண்டாம்!

வீ. மித்திரவசு ! அவசரப்படவேண்டாம் ! என்ன ஆச்சரியம்! சாகரிகா! இதென்ன இது? நான் மித்திரவசுவையா பிடித்துவரச் சொன்னேன் ?

சா. மஹாராஜா, எனக்கு மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது ! எனக்கு ஒன்றுந் தோற்றவில்லை. அந்த சன்யாசி என்னை மோசஞ் செய்தான் ! நான் என்ன செய்வேன் ? இக் கோணிப் பையைக் கொடுத்து அதனுள் நாம் தேடும்படியான துஷ்டன் இருப்பதாகச் சொல்லவே, நான் மெய்யென்று நம்பி எடுத்துக்கொண்டு வந்தேன் அந்த சன்யாசி மஹா திருடனாக இருக்கவேண்டும்.

மி. இல்லை ! இல்லை ! நீ தான் மஹா திருடி. நான்தான் மித்திரவசு, அவிழ்த்துவிடுங்களென்று எத்தனை தரம் வேண்டினேன், விட்டீர்களா ?

சா. ஐயா, எங்கள்மீது கோபங்கொள்ள லாகாது. நாங்களென்ன செய்வோம் ? அக் கெட்ட சன்யாசி இப் பையிலிருப்பவன் தான் மித்திரவசு வென்று கூறி தப்பித்தோடலாமென்று பார்க்கிறான், ஜாக்கிரதையா யிருங்கள் என்று கூறினான். ஆகவே உங்களை யறியாது, வெளியில் விடோ மென்றோம். நாங்கள் அறியாது செய்த பிழையை மன்னிக்கவேண்டும்.

மி. ஆம், உனக்கென்ன சொல்லாமல், நான் பட்டது எனக்கல்லவோ தெரியும்.

வீ மித்திரவசு, நீ கோபங் கொள்வதிற் பயனில்லை. தெரியாமல் நடந்த காரியத்திற்கு நாமென்ன செய்யலாம் ? ஆயினும் உன்னை இக் கோலங்கண்ட அக் கபட சன்யாசிக்குத் தகுந்த சிக்ஷை விதிக்கிறேன். சேவகா ! அந்த சன்யாசி சீக்கிரம் இங்கு வருவான், வந்தவுடன் ஒரே பிடியாய்ப் பிடித்துக்கொண்டு என்முன் வரவேண்டும்.

சே. அப்படியே ! மஹாராஜா !

சா. [ஒரு புறமாக] ஆம்! இங்கு வந்தகாலத்தில் பார்த்துக் கொள்வோம்!

வீ. ஆஹா! சுந்தரி! உனக்கென்ன இதெல்லாஞ் சிரிப்பாக இருக்கிறதோ? சற்றுப் பொறு. இன்னும் மாலைப் பொழுதாக வில்லை. அதற்குள்ளாக எப்படியும் உன் காதலனைப் பிடித்து வந்து என் சபதத்தை நிறைவேற்று கிறேன் பார். மித்திரவசு, நேரமாகிவிட்டது, வீணாகக் காலத்தைக் கழித்துவிட்டோம். இரவாகுமுன் நாம் கண்டுபிடிக்கவேண்டும், சீக்கிரம் வா போவோம்.

[சேகவர்களுடன் போகிறார்.
மித்திரவசுவும் போகிறான்.]

சா. ஆஹா! ஆ! சுந்தரி! கோணிக்குள்ளிருந்தவர் யாரென்று கண்டாயா? என்னுடைய வார்த்தையை இப்பொழு தாவது நம்புவாயா? மித்திரவசுவுக்கு இத் தண்டனை போதுமல்லவா?

சு. அடி! சாகரிகா! இந்த விளையாட்டிருக்கட்டும். என் பிரா ணநாதர் இவர்கள் கையிலகப்படாத வண்ணம் பத்திரமா யிருக்கிறாரோ?

சா. அம்மா, நான் முன்பே கூறினேனே. இப் பட்டணத்தில் இவர்கள் இன்னும் பத்து வருஷங்கள் தேடினாலும் இவர் கள் கையி லகப்படமாட்டார். நீ அவரைக் குறித்து இனி கவலைப்படவேண்டாம்.

சு. ஆயினும் தோழி, நான் அவரை மறுபடியும் எப்படிக் காண்பது? அவரைக் காணுமளவும் மதனன் செய்யும் வேதனையை எவ்வாறு தரிப்பேனடி!—அடா! மதனா! ஏனடா இவ்வாறு வாட்டுகிறாய்!

[குறத்தி வெளியே பாடுகிறாள்.]

ஆ! சாகரிகா, யாரோ குறத்தி கூவுகிறாற்போ லிருக் கிறது. அவளுக்குக் குறஞ் சொல்ல ஒரு வேளை தெரிந் திருக்கலாம், நீ போய் அழைத்து வா, குறம் கேட்போம்.

சா. அம்மா, இதிலெல்லா மென்ன யிருக்கிறது?—ஆயினும் நான் போய் அழைத்து வருகிறேன். [போகிறாள்.]

மறுபடியும் சாகரிகை ஒரு குறத்தியுடன் வருகிறாள்.

சு. இவள்தானா குறத்தி?

கு. ஆமா அம்மே, நான்தா குறச்சி! அம்மே! எங்க ஜாரி குறஜாரி அம்மே, நாங்கோ குறம் சொல்ரோ அம்மே! குறம் சொல்ரோ!

சு. அப்படியா! ஆனால் நானொன்று மனதில் எண்ணியிருக்கிறேன், அதைச் சொல் பார்ப்போம்.

கு. இதோ! சொல்ரே அம்மே! இதோ! சொல்ரே! நீங்க கை காட்டுங்கோ அம்மே! கை காட்டுங்கோ—நன்னா யிக்குது அம்மே! அல்லாம் நொம்ப நன்னா இக்குது அம்மே! அல்லாம் நொம்ப நன்னா இக்குது! இதோ நீங்க கேக்ரகுறி சொல்ரே னம்மே!—அம்மே ஒரு புருசமேலெ ஆசெ பட்டு இக்கிரா, அந்தப் புருசெ, வருவானா இண்ணு நினெக்கிறா அம்மே! பயப்புடாரே, எப்படியும் வருவாரு பயப்புடாரே அம்மே!—ஆனா கொஞ்ச மனசுக்கு கஸ்தம் வரு. வந்தாலும் கடைசியிலே எல்லாம் சரியாபூடு அம்மே! சரியாபூடும்! நீ மகாராஜியாவே அம்மே! பயப்புடாரே! பயப்புடாரே—அம்மே!

சு. அப்ப்டியா! சரிதான், சாகரிகா, இந்த குறத்திக்கு நல்ல வெகுமதி கொடுத் தனுப்பு. ஆயினும் இவள் கூறியது என் மனக் கவலையை அதிகப்படுத்தி விட்டது!

சா. அம்மா, நான் முன்பே கூறினேனே, இவள் கூறியதை நீ நம்பி அதைரியப் படவேண்டாம்; உனக்கு ஒரு துன்பமும் வராது.

கு. ஆம்ரையே! ஆம்ரையே! நான் பொய் சொல்றேனு? உங்கும் கொஞ்சம் மனக் கஸ்தம் வருது பாரு!

சா. வந்தால் வரட்டும், நீ போ.

[குறத்தியை வெளியே அழைத்துக்கொண்டு போகிருன்.]

காட்சி முடிகிறது.

## நான்காம் காட்சி

இடம்—அரண்மனை நந்தவனத்தில் ஓர் மூலை.

மித்திரவசு ஒரு நிருபத்தைப் படித்தவண்ணம் வருகிருன்.

மி. ஆ! என்ன எழுதி யிருக்கிறது! "என் காதற் கிளியே! சுந்தரி! நீ எழுதிபபடியே இன்று சாயங்காலம் ஐந்து மணிக்கு நான் உன்னை அந்தப்புரத்தின் நந்தவனத்தில் தெற்கு மூலையில் தவருது காண்கிறேன். இப்படிக்கு உனக்காகத் தனதாவியையு மிழக்கச் சித்தமா யிருக்கும், உன் காதலன்"—ஒஹோ! அப்படியா சமாசாரம்? இப்பொழு தெல்லாம் தெரிய வருகிறது. அந்தமட்டும் இக்கடிதத்தை என்னவோ வென்று பாரா திராமல் எடுத்துப் பார்த்தேனே! இதன் பக்கத்தில் கிடந்த பூச் செண்டிற்குள்ளாக இதை வைத்து, அத் திருடன் சுந்தரிக்கு அனுப்பினுற்போ லிருக்கிறது. ஆஹா! பல நாளைத் திருடன் இன்றைக்கு அகப்பட்டுக்கொண்டான். இம் முறை இவனை விடுவேனே நான்? இப்பொழு து என்ன நேரமாகிறது?—சூர்யாஸ்தமன மாகிவிட்டது. சுந்தரியும் அத் துஷ்டனும் எப்படியும் இங்குதான் வருவார்கள். நான் இங்கே ஒளித்திருந்து, சற்று நேரம் இவர்கள் என்ன பேசுகிருர்களென்று கேட்டிருந்து, பிறகு மஹாராஜாவிடம் தெரியாமற் போய்ச் சொல்லி, இவனைப் பிடித்துக் கொள்ளச் செய்கிறேன். இன்

றைக்கு நா மெழுந்த வேளை நல்ல வேளை ! இனி விடேன் இவனை !

[ஒருபுறம் போய் மறைந்து கொள்கிறான்.]

சுந்தரியும் சாகரிகையும் வருகிறார்கள்.

சு. அடி, சாகரிகா, நேரமாய்விட்டதே இன்னும் எனது கண்ணாளன் வரக் காணோமே! ஆ, தோழி! நான் பெண் ஜன்ம மெடுத்ததற்கு இதுவோ பலன்? நான் ஒரு புருஷன்மீது காதல் கொண்டிருக்க, வேறொரு புருஷனை எப்படி நான் மணப்பேன்? பிதாவோ நான் என்ன வேண்டியும் கேளாமல், நாளைத்தினம் என்னை அச் சண்டாளன் மித்திரவசுவுக்கு விவாகஞ் செய்து கொடுப்பதாகக் கூறிவிட்டார். நான் என்ன செய்வேன்?

சா. அம்மா அப்படி ஒன்றும் நேரிடாதென்றே நினைக்கிறேன். அதோ உன்னுடைய காதலர் வருகிறார். நான் போய் வருகிறேன். [போகிறாள்.]

அதிநுபன் வருகிறான்.

சு. ஆ! பிராணநாதா!

அ. ஆ! கண்ணே!

[ஒருவரை யொருவர் கட்டி முத்தமிடுகிறார்கள்.]

சுந்தரி, ஏன் கண்ணீர் விடுகிறாய்? என்ன சமாசாரம்? இப்படி உட்கார்.

சு. பிராணநாதா, நான் உம்மை இவ்வளவு அவசரமாக வர வழைத்ததற்குக் காரணம் உமக்குத் தெரியாதே; சொல்லுகிறேன் கேளும்—பிதா என்னை நாளைக்கு மித்திரவசுவுக்கு விவாகஞ் செய்து கொடுக்கப் போகிறாராம். [துக்கப்படுகிறாள்.]

அ. கண்ணே, அழவேண்டாம், எல்லாவற்றையும் விவரமாகச் சொல். நாளைத்தின மென்று கூறினாய்?

சு. ஆமாம், நாளைத்தினம் காலை; நான் என்ன வேண்டியும் பிடிவாதமா யிருக்கிறார். பிராணநாதா! நா னென்ன செய்வேன்?

அ. அப்படியா, ஆனால் சுந்தரி, இதினின்றும் நீ தப்பித்துக் கொள்ள ஒரே மார்க்க முண்டு.

சு. என்ன, என்ன?

அ. உன் பிதாவோ இனி நீ என்னவேண்டியும் மன மிரங்கார். ஆதலால் நாளைத்தினம் விடிவதன்முன் நாமிருவரும் இப் பட்டணத்தை விட்டுச் செல்லவேண்டும்.

சு. ஆமாம்! அப்படியே; பிராணநாதா, நீர் எங்கு சென் றாலும் உமக்குப் பின்னாகவே நானும் தொடரச் சித்தமா யிருக்கிறேன்.

அ. ஆனால் கண்மணி, இன்றிரவு நான் இங்கு பன்னிரண்டு மணிக்கு வந்திருக்கிறேன். நீ ஒருவரிடமுங் கூறாது, இங்கு அந் நேரத்தில் வந்திருப்பாயானால், நாமிருவரும் பொழுது விடிவதன்முன் இவ் வூரைவிட்டுச் செல்வோம். அதைத் தவிர இச் சங்கடத்தினின் றுங் கரையேற வேறு மார்க்கம் எனக்கு அகப்படவில்லை.

சு. ஆம் ஆம்! பிராணநாதா, அப்படியே செய்வோம்.

மித்திரவசு மறைவிடமிருந்து வெளியே வருகிறான்.

மி. ஹா! ஹா! அப்படியா சமாசாரம்? இரண்டு பேரும் இன் றிராத்திரி ஊரைவிட்டா ஓடிப்போகப் போகிறீர் கள்! இதோ போகிறேன் மஹாராஜாவிடம்—அடே! துஷ்டா!

சு. ஐயோ! ஐயோ! மித்திரவசு! பிராணநாதா, நீர் இங்கு நில்லாது ஓடிப் போய்விடும்!

அ. இவன்தானோ மித்திரவசு? சீ!

[வாளைவீச, மித்திரவசு கீழே விழுகிறான்.]

சுந்தரி, நான் கூறியது ஞாபக மிருக்கட்டும்.

[விரைந்து போகிறான்.]

மி. ஐயோ! ஐயோ! மஹாராஜா! மஹாராஜா! சேவகர்களே! அதோ ஓடுகிறான்! பிடியுங்கள்! பிடியுங்கள்! என்னைக் கொன்றுவிட்டான் பாவி!

வீரசேனன் நான்கு சேவகர்களுடன் ஒருபுறமாய் வருகிறான்.

சாகரிகை மற்றொருபுறமாக வருகிறாள்.

வீ. மித்திரவசு! என்ன சமாசாரம்? என்ன சமாசாரம்?

மி. ஐயோ! மஹாராஜா! நான் உயிரோ டிருக்கிறேனா அல்லது செத்துப்போய்விட்டேனா, பாருங்கள். அந்தப் பாவி என்னைக் கொன்றுவிட்டான்.

வீ. அப்பா, உனக் கொன்று மில்லை. ஒரு காயமும் காணோமே. எழுந்திரு. என்ன சங்கதி? யார் உன்னை யடித்தது?

மி. [எழுந்து] யார் என்னை அடித்தது! அதோ ஓடினானே பார்க்கவில்லையா? என்னை உதைத்துவிட்டு ஓடினவன் உம்முடைய பெண்ணின் காதலன்தான்.

வீ. அப்படியா! முன்பே என் சொல்லவில்லை? எப்படிச் சென்றான் அவன்?

மி. இதோ இப்படி, நீங்கள் அவனைப் பிடித்துக்கொண்டீரென்றல்லவோ பார்த்தேன்.

வீ. சேவகர்களே! உங்களி லிருவர் இந்தப் பக்கமாகச் சென்று யார் அங்கு போனபோதிலும் பிடித்து வாருங்கள், பிடித்து வராவிட்டால் உங்களைச் சிரசாக்ஞை செய்யும்படியாகக் கட்டளையிடுவேன்.

சே. அப்படியே மஹாராஜா! [இரண்டு சேவகர்கள் ஓடுகின்றனர்.]

வீ. ஆ! சுந்தரி! என்ன சங்கதி? எல்லாவற்றையுஞ் சொல்லுகிறாயா என்ன? மித்திரவசு, அத் துஷ்டன் இங்கெப்படி வந்தான்?

மி. இதோ பாரும் இந் நிருபத்தை; அப்புறம் எல்லாவற்றை யும் சொல்லுகிறேன்.

வீ. [விரைவுடன் அதைப் படித்துப் பார்த்து] ஆஹா! சுந்தரி! நீ என்னுடைய பெண்ணென்றும் பாராமல் உன்னை ஒரே வெட்டாக வெட்டிவிடவா? இது என்ன இது?

மி. இன்னுங் கேளுங்க ளையா! நான் இத் தோட்டத்தில் உலாவிக்கொண் டிருந்தபொழுது அகஸ்மாத்தாய் இக் கடிதத்தைக் கண்டெடுத்தேன். பிறகு அதனல் சமாசா ரத்தை யறிந்து, இவர்கள் என்ன பேசிக்கொள்ளுகிருர் கள் என்று கண்டறிய, இங்கே ஒளித்துக்கொண் டிருந் தேன். இருவரும் வந்தார்கள், முத்தமிட்டுக் கொண்டார் கள். பிறகு இப்பொழுது என்ன தீர்மானித்துக்கொண் டிருக்கிருர்கள் தெரியுமா? இரண்டு பேரும் இன்றிரவு பன்னிரண்டு மணிக்கு இவ்வூரை விட்டு ஓடிப்போகப் போகிருர்களாம். உம்முடைய பெண்ணை ஜாக்கிரதை யாகப் பார்த்துக்கொள்ளும்.

வீ. இன்றிரவா ஓடிப்போகப் போகிருர்கள்?

மி. ஆமாம். அந்த மஹானுபாவர் இரவு பன்னிரண்டு மணிக்கு இங்கு வந்திருப்பதாகச் சொன்னர். இந்த அம்மாளுந் தானும் ஒருவரு மறியாதபடி இங்கு வரப் போகிருர்களாம். இருவரும் பிறகு ஓட்டம் பிடிக்கத் தீர்மானித்திருக்கிருர்கள்.

வீ. சுந்தரீ! இது உண்மைதான?— என்ன நான் கேட்பதற்கு பதில் கூரும லிருக்கிருய்?—நான் இன்னும் உன்னை ஒரே முறை கேட்பேன், உண்மையைக் கூறுகிருயா என்ன?—கூறமாட்டாய்?—இருக்கட்டும், நான் உன்னை அடக்குகிற விதத்தில் அடக்குகிறேன். சீ! நீ என் னுடைய பெண் ணல்ல! இன்றிரவு பன்னிரண்டு மணிக்கு ஒரு அற்பனுடன் கூடி இந் நகரத்தை விட்டுச் செல்லவா போகிருய்! அதனை நா னறிகிறேன்! சாகரிகா, சுந்தரி யின் இருகரத்தையும் ஜாக்கிரதையாய்ப் பிடித்துக்

கொண்டு என்பின் வா. சுந்தரி! இன்றிரவு உன்னை அரண்மனையின் பெரிய சிறைச்சாலையில் அடைத்து வைக்கிறேன். அப்பொழுது நீ என்னமாகத் தப்பிச் செல்கிறாயோ பார்ப்போம். நாளைத்தினம் காலை உன் மதத்தை யடக்கி, இந்த மித்திரவசுவுக்கு உன்னை விவாகஞ்செய்து வைக்கிறேன் பார்—பட்டணத்தை விட்டா ஓடப் போகிறாய்? சேவகர்களே! ஜாக்கிரதையாக முன்னும் பின்னுமாகக் காவல் செய்துகொண்டு சிறைச்சாலைக்குச் சுந்தரியை அழைத்து வாருங்கள். நான் போகிறேன். [போகிறான்.]

சு. [ஒரு புறமாக சாகரிகையிடம்] அடி தோழி, நான் என்ன செய்வேன் இனி?

சா. [ஒருபுறமாக சுந்தரியிடம்] அம்மா, அழவேண்டாம். நான் சென்று, உன் காதலரிடம் எல்லாச் சாமாசாரங்களையும் கூறி, உன்னை எப்படியாவது சிறையினின்றும் இன்றிரவே விடுவித்து அழைத்துச் செல்லும்படி செய்விக்கிறேன்; என் வார்த்தையைப் பார். அம்மா, நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். [எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

## ஐந்தாம் காட்சி

இடம்—ஓர் சிறைச்சாலை.

வெளியில் நான்கு சேவகர்கள் காவல் இருக்கிறார்கள்.

சுந்தரி மேல்மாடியின் பலகணியருகில் வருகிறாள்.

சு. ஆ! இந்தக் கதி அனுபவிப்பதற்கோ நான் பெண் ஜன்மமெடுத்தேன்! ஐயோ! இவ் வுலகில் பிறந்த பெண்களில் என்னைப்போன்ற பாவிகள் யாராவது இருப்பார்களா? இருக்கமாட்டார்கள்! இருக்கமாட்டார்கள்! ஆ! பெண்ணாய்ப் பிறத்தலே பெருந் துயரத்திற் கேதுவாம்; நான்

ராஜ குமாரத்தியாகப் பிறந்து என்ன சுகத்தை அனுபவித்தேன்? என் கருத்திற் கிசைந்த புருஷனை அடையாது இந்தச் சிறையிற்பட்டேனே, அவ்வளவே! ஐயோ! எனது காதலனை இனிக் காண்பேன் என்னும் ஆசையை விட்டேன்! விட்டேன்! ஈசனே! இக் கோலமும் என்னை நீ காட்டுவாயா? என் தலையி லெழுதிய விதியை என்னென்று சொல்லுவேன்? ஐயோ! இம்மட்டோ! என்னைப்போன்ற மஹா பாபி வேறொருத்தியும் இவ்வுலகி லில்லையென்று சொல்லவேண்டும். நான் துயரப்படுவதுமன்றி, ஒரு பாபமும் அறியாத ஒரு மஹா புருஷனையும் துன்பத்திற் காளாக்கினேனே! என் காதலர் நான் படுந் துயரத்தைக் கேட்பாராயின், அவர் மனம் எவ்வளவு வருந்தும்! காதலரே, உம்மீது நான் காதல் கொண்டதற்குப் பலன் உம்மை நான் வருத்தமடையச் செய்வதேயோ? ஐயோ! உம்மை நான் மறுபடியும் எந்த ஜன்மத்திற் காணப்போகிறேன்? இனி யழுது பயனில்லை. இப்பொழுது நம்முடைய ஸ்திதியை சற்று யோசிப்போம். இந்தச் சிறைச்சாலையினின்றும் தப்பித்துச் செல்லவோ எனக்கு ஒரு யுக்தியும் தோற்றவில்லை. இங்கு காவல் செய்யும் யம தூதர்களைப் போன்ற சேவகர்கள் என்னைத் தப்பச் செல்லவிடார். நமது தோழி சாகரிகை எப்படியாவது என்னை இன்றிரவு இவ்விடத்தினின்றும் தப்புவிக்கும் வழியைத் தேடுகிறேனென்று உறுதியாகக் கூறிச்சென்றுள். ஆயினும் பேதையாகிய அவளால் என்ன முடியும்?—நாளைத்தினம் காலை நான் இங்கிருப்பேனாயின், பிதா என்னை எப்படியும் மித்திரவசுவுக்கு விவாகஞ் செய்துவிடுவார். அப்பொழுது நான் எண்ணியிருந்த எண்ணங்களெல்லாம் என்னவாகிவிடும்? பிதாவோ தனது தீர்மானத்தினின்றும் எப்படியும் மாறமாட்டார்.—எப்படியாயினு மாகுக; காதலரே, உமக்கு நான் அன்று பிரமாணஞ் செய்து கொடுத்ததை மறப்பேனே? ஒருகாலும் மறவேன்!

நான் மணம் புரிவேனுயின், உம்மை மணம் புரிவேன், அல்லது எனது உயிரைத் தியாகஞ் செய்துகொள்வேன்! நாளைத்தினம் காலைக்குள்ளாக நான் உம்மை அடையப் பெருவிடின் எனது யிரை மாய்த்துக்கொள்வேன்; இது நிச்சயம்.

மு-சே. அடே, பத்திரம், ஜாக்கிரதையாக நாம் இன்று காவல் செய்யவேணும், இல்லாவிட்டால் நமது தலை போய்விடும்.

இ-சே. ஆமாம், இன்றிரவு நாம் தூங்கவே கூடாது.

மு-சே. ஆம், எல்லோரும் ஜாக்கிரதையாக விழித்துக்கொண்டு காவல் செய்யவேண்டும்:—அப்பா !—இன்றைக்கென்ன சிறிதும் காற்றில்லை. உடம்பெல்லாம் வியர்க்கிறது!

நா-சே. ஆமாம், எனக்கு மிகவும் இளைப்பா யிருக்கிறது. மிகவும் தாக மெடுக்கிறது

அதிநுபன் ஓர் வயித்தியனைப்போல் வேஷம் பூண்டு வருகிருன்.

மு-சே. அடே! யாரது? நில் அங்கே!

அ. அப்பா, பக்கத்துக் கிராமத்துக்குப் போகும் வழி எது?

நா-சே. அதிருக்கட்டும், நீ யார்?

இ-சே. அடே! அது என்ன மூட்டை?

அ. ஒன்று மில்லையப்பா, வெறும் துணி.

மு-சே. அடே! உள்ளே என்னமோ இருக்கிறது, வெறுந் துணி என்கிருயா? உண்மையைச் சொல்லுகிருயா என்ன?

அ. அப்பா, எனக்குப் பக்கத்துக் கிராமத்துக்குப் போகும் வழியைக் காட்டுவீராயின் சொல்லுகிறேன்.

இ-சே. காட்டுகிறேன், சொல்.

அ. அப்பா, இத்தனை காலமாக ஒரு மஹானுபாவரை அடுத்து தொண்டு செய்துவந்தேன், அவர் நான் விடை பெற்று எனதூருக்குப் போகும்பொழுது, இந்த ஔஷ

தத்தைக் கொடுத்தார், இது மிகவும் விலை யுயர்ந்தது, எங்கு மகப்படாது.

மூ-சே. என்ன மருந்து? என்ன மருந்து?

அ. இதைச் சாப்பிட்டால் பெரியவர்களை யெல்லாம் வாலிபர் களாக்கிவிடும், தேசத்திற்குக் காந்தியையும் பலத்தையுங் கொடுக்கும்.

இ-சே. அப்படியா? எதோ, எங்களுக்குக் கொஞ்சங் கொடு பார்ப்போம்—தாகமாக இருக்கிறது.

அ. எனக்கு வழியை காட்டுகிறதானால் கொடுக்கிறேன்.

இ-சே. காட்டுகிறோம், கொடு கொடு!

[ஒவ்வொருவனும் அம் மருந்தில் கொஞ்சம் குடிக்கிறார்கள்.]

மூ-சே. ஆஹா! மிகவும் நன்றா யிருக்கிறது. இன்னுங் கொஞ்சங் கொடு.

மற்றவர். எனக்கும்! எனக்கும்!

[புட்டியி லிருப்பதை யெல்லாம் குடித்து விடுகிறார்கள். பிறகு ஒவ்வொருவனாக குடிவெறி கொண்டு ஆடிப்பாடி தள்ளாடி மயக்கமாய்க் கீழே விழுகி றார்கள்.]

அ. இதுதான் நமக்குச் சமயம்! இனி எனக்கு இந்த வேஷம் என்னத்திற்கு? [வேஷத்தைக் களைந்து]

சரி, இதன் சாவி யெங்கே?

[சேவகர்களின் உடையைப் பரி சோதித்து சிறைச்சாலையின் திறவுகோலை எடுக்கிறான்.]

சு. [பலகணியின் வழியாய்] ஆ! பிராணநாதா!

அ சுந்தரி, கூச்சலிடாதே! மெல்ல இரங்கிவா வெளியே; இதோ சிறைச்சாலைக் கதவைத் திறந்துவிட்டேன்.

[திறக்கிறான்.]

சுந்தரி கீழே வருகிருள்.

சு. ஆ! நாதா! உம்மை நான் மறுபடியும் காணும்படி வாய்த்ததே!

அ. கண்ணே! நாம் இப்பொழுது சப்தமிடலாகாது. இச்சேவகர்கள் குடித்து உறங்குகிருர்கள். இவர்கள் மயக்கந் தெளிவதன்முன் நாம் போய்விடவேண்டும். சீக்கிரம் வா, போவோம் நம்மை சாகரிகையும் எனது தோழனும், எதிர் பார்த்துக்கொண்டு அருகாமையிலிருக்கிருர்கள். போவோம் வா, விரைவாய் நட.

சு. பிராணநாதா! இங்கே யார் குரலோ கேட்கிறது. பதுங்கியிருந்து என்னவென்று கேட்டறிவோம்.

[ஒரு புறமாய் மறைகின்றனர்.]

மித்திரவசு வருகிருன்.

மி. மஹாராஜா சிறைச்சாலையைச் சேவகர்கள் ஜாக்கிரதையாகக் காவல் செய்கிருர்களா வென்று பார்த்துவிட்டு வரச்சொன்னர்—போய்ப் பார்க்கிறேன். [அருகிற் சென்று] ஆ! இதென்ன ஆச்சரியம்! சிறைச்சாலையின் கதவு திறந்து கிடக்கிறது! சேவகர்கள் உறங்கிக்கொண்டிருக்கிருர்கள்! உள்ளே சுந்தரி இருக்கிருளோ? போய்விட்டாளோ? [உள்ளே போகிருன்.]

சுந்தரியும் அதிரூபனும் வருகிருர்கள்.

சு. பிராணநாதா! நல்ல வேளை, அகப்பட்டுக்கொண்டான் மித்திரவசு! இவனை உள்ளே வைத்துப் பூட்டிவிட்டுச் செல்வோம்! [கதவைப் பூட்டி விடுகிருள்.]

அ. ஆம், அவனுக்குத் தக்க தண்டனையே! வா, சீக்கிரம் போவோம். [இருவரும் விரைந்து போகிருர்கள்.]

மி. [பலகணியின் வழியாய்ப் பார்த்து] அடே! யாரடா கதவைப் பூட்டினது? சேவகர்களே! என்னடா என்னை உள்ளே

அடைத்துப் பூட்டிவிட்டீர்கள்? நான் மித்திரவசு வாச்சே! கதவைத் திறந்து வெளியே விடுங்கள்! விடுங் கள்! என்ன? ஒருவனும் எழுந்திருக்க மாட்டேனென் கிருன்! ஐயோ! ஐயோ! முன்பு கோணிப்பையி லடைக் கப்பட்டேன்; இப்பொழுது சிறைச்சாலையி லடைத்து விட்டார்கள்! சுந்தரியோ ஓடிப்போய்விட்டாள். நான் எப்படி வெளியே போவது? ஐயோ! இதுவும் என் தலை விதிதான்.

வீரசேனன் சேனைத் தலைவனுடனும் நான்கு போர்வீரர்களுடனும் வருகிருன்.

வீ. அர்த்த ஜாம மாகிவிட்டது. நடுராத்திரிக்கு முன்பல்ல வோ சுந்தரி இப் பட்டணத்தை விட்டுச் செல்ல யத்த னித்தாள்; இதோ சென்று அவளை வெட்கப்படும்படிச் செய்கிறேன். சுந்தரி! துஷ்டப் பெண்ணே! இப் பொழுது உன்னுடைய எண்ணம் நிறைவேறியதா? அல்லது என்னுடைய எண்ணம் நிறைவேறியதா?—ஆ! வீரமார்த்தாண்டா! நான் காவல் செய்யச் சொன்னல் இவர்களெல்லாம் என்ன உறங்குகிருர்களே! அடே!

[சேவக னொருவனை உதைத் தெழுப்புகிருன்.]

இது என்னடா இது?

இ-சே. உண்டே! [கீழே விழுகிருன்.]

வீ. ஓஹோ! சேனைதிபதி! இவர்களெல்லாம் எதையோ குடித்து மயங்கிக் கிடக்கிருர்கள். போர்வீரர்களே! இவர்களை உதையின்மே லுதை யுதைத்து எழுப்புங்கள்.

போ. அடே! மஹாராஜா! மஹாராஜா!

[சேவகர்கள் மெல்ல எழுந்திருக்கிருர்கள்.]

வீ. அடே! கழுதைகளே! நான் உங்களை ஜாக்கிரதையாகக் காவல் செய்யச் சொன்னல் கள்ளைக் குடித்து விழுந்தா கிடக்கிறீர்கள். சேனைதிபதி! இவர்களை யெல்லாம் சேவ கத்தினின்றும் நீக்கிவிடு!

சே. மன்னியும்! மஹாராஜா! மன்னியும்!

வீ. அதிருக்கட்டும், சாவி எங்கே? அந்தமட்டும் இதைத் திறந்துவிடாமற் போனர்களே!

மு-சே. இதோ!

[சுந்தரி கீழே போட்டுவிட்டுப் போன சாவியை எடுத்துக் கொடுக்கிருன். வீரசேனன் சிறையைத் திறக்க மித்திரவசு வெளியே வருகிருன்.]

வீ. மித்திரவசு! நீ சிறைச்சாலையினுள்ளே எப்படிச் சென்ருய்?

மி. ஆமாம்! போய்ப் பாரும், நான்தான் சிறைச்சாலையிலிருந்தேன். வேறு யாராவது இருக்கிருர்களா என்று பாரும்.

வீ. என்ன! என்ன!

[உள்ளே விரைந்தோடிப் பார்த்து வெளி வந்து]

ஓஹோ! மதிமோசம் போனேனே! சுந்தரி தப்பித்துப் போய்விட்டாள்போ லிருக்கிறதே!

மி. அப்பொழுதே நான் வருவதற்கு முன்னேயே போய்விட்டாள். நான் வந்து பார்க்கும்பொழுது கத்தி கட்டி சேவகர்களெல்லாம் தூங்கிக்கொண் டிருந்தார்கள், கதவு திறந் திருந்தது. நான் உள்ளே சென்று பார்க்க சுந்தரியைக் காணேம். வெளியில் வரலாமென்ருலோ இதற்குள்ளாக ஒருவன் எழுந்து பூட்டிவிட்டான் நான் என்ன செய்வது? இதுவரையில் சுகமாக உள்ளே படுத்துத் தூங்கிக்கொண் டிருந்தேன்!

வீ. ஆ! என்ன மோசம் போனேன்! என்னுடைய பெண் என்னை ஏமாற்றிவிட்டாளே! அவள் என்னைப்படி முடித்தாளே! ஆ! சேனதிபதி! இந் நான்கு கழுதைகளையும் உடனே வெட்டிவிடு—இரு, அப்படியல்ல. அடே சேவகர்களே! நீங்கள் உடனே சென்று, எப்படியாவது என்

குமாரத்தியைத் தேடிக் கொண்டு வராவிட்டால் உங்களைச் சிரசாக்ஞை செய்துவிடுவேன். நான் காவல் செய்யச் சொன்னால் கள் குடித்து சுந்தரி தப்பிப் போகும்படி செய்கிறீர்களா? சேனாதிபதி, நீ நம்முடைய சைனியங்களை அழைத்து இவர்களுடன் செல். என்னுடைய பெண்ணை நீங்கள் கண்டுபிடித்து எப்படியாவது என்னிடங்கொண்டு வராவிட்டால் உங்களை சேவகத்தினின்றும் தள்ளிவிடுவேன். செல்லுங்கள் இக்ஷணமே!—மித்திரவசு, நீயுஞ் சென்று தேடுவாய் இவர்களுடன். ஆஹா! என்ன மதிமோசம் போனேன்! [போகிறான்.]

மி. குதிரை செத்ததுமன்றி குழி தோண்டவுங் கூலி! ராஜகுமாரத்தியை ஒருவன் அழைத்துச் செல்லுகிறதென்ன, அவளை நான் பிறகு தேடுகிறதென்ன! இதுவும் விதிதான்! [எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



# மூன்றும் அங்கம்

---

## முதல் காட்சி

இடம்—ஓர் காடு.

அதிருபன், சுந்தரி, சத்யவந்தன், சாகரிகா,

வருகிறார்கள்.

அ. ஆ! நண்பனே! நமக்கு என்ன காலம் வந்தது பார்த்தாயா! இந்தக் காட்டைவிட்டு எப்படி வெளியே போகப் போகிறோம்?

ச. ஐயனே, இதற்காகத் தாங்கள் வருந்த வேண்டியதில்லை. இந்த வனத்தைவிட்டு வெளியே செல்லும்படியான வழி இராமற் போகாது. இதைப் பார்க்கிலும் எவ்வளவோ பெரிய ஆபத்துக்களை யெல்லாங் கடந்து வந்தோமே! அப்படியிருக்க இதற்காகவா நாம் வருந்தவேண்டும்?— ஆயினும் நம்முடன் வரும்படியான இவர்கள் வருந்த வேண்டி வருகிறதே என்று மாத்திரம் எனக்குச் சஞ்சலமா யிருக்கிறது.

அ. ஆம்! ஆம்! கண்ணே! நீ மலரினும் மெல்லிய உன் பாதங்களால் இப் பருக்காங் கற்கள் நிறைந்த காட்டில் நடக்கும்படி நேரிட்டதே! எனது நிமித்தம் நீ எவ்வளவு துன்பப்படுகிறாய்! ஐயோ! அரண்மனையில் சுகமாக வசித்திருந்த வுன்னை பாபி நான் அழைத்து வந்து, இக்கோலங் காட்டுகிறேனே!

சு. பிராணநாதா, தாங்கள் இவ்வாறு கூறலாகாது. நானும் முடன்கூடி யிருக்குமளவில் இக் காடு தேவர்கள் வாழும் நாட்டிற்குச் சமானமானதே! உம்மைப் பிரிந்து நான் தனியே யிருக்கும்படியான நாடு, புலிகள் வாழுங் காட்டிற்குச் சமானமே! நீர் என்னுடன் இருக்கும் வரையில் எனக்கென்ன குறை?—ஆயினும் பிராணநாதா, எனக்

குக் கொஞ்சம் இளைப்பா யிருக்கிறது, சற்று இங்கிருந்து இளைப்பாறிப் பிறகு செல்வோம்.

சா. [சத்யவந்தனுக்கு] எனக்கு மப்படியே தோணுகிறது.

அ. அதற்கென்ன, அப்படியே செய்யலாம்.

[உட்காருகிறார்கள்.]

ச. நீங்களெல்லாம் மிகவுங் களைத்திருக்கிறீர்கள். எனக்கும் மிகவும் தாக விடாயாக இருக்கிறது. அதோ தோன்றும் படியான மடுவிற்குச் சென்று, நானும் நீ ரருந்தி, உங்களுக்கும் ஜலங் கொண்டு வருகிறேன், இங்குதானே ஜாக்கிரதையாக இருங்கள். [போகிறான்.]

சா. அம்மா, உன்னுடைய பிதா, நீ சிறைச்சாலையினின்றும் தப்பி வந்து விட்டதைக் குறித்து, என்ன கோபங் கொண் டிருக்கிறாரோ ?

விதர்ப்பதேசத்து சேவகர்கள் ஓடி வருகிறார்கள்.

சே. ஆஹா! இதோ கண்டு பிடித்துவிட்டோம்! இதோ கண்டு பிடித்து விட்டோம்!

அ. சுந்தரி, சாகரிகா, பயப்பட வேண்டாம். இவர்கள் நம் முடைய சேவகர்களே!—என்ன சமாசாரம்? நீங்கள் இங்கு எங்கே வந்தீர்கள் ?

சே. அரசே! மஹாராஜா உம்மைக் கையுடன் அழைத்து வரச் சொன்னார். தாங்கள் பட்டணத்தை விட்டுச் சென்றது முதல் ஊண் உறக்கமின்றி மிகவும் வருந்தி யிருக்கிறார்; தாங்கள் இவ்வளவு நாளாயும் திரும்பி வராமையால் மன வருத்தமுற்று ஆங்காங்கு சேவகர்களை யனுப்பி, எப்படியாவது கண்டு பிடித்து வரும்படியாகக் கட்டளையிட் டிருக்கிறார்; தாங்கள் உடனே வராவிட்டால் மஹாராஜாவுக்கு உயிர் போய்விட்டாலும் போய் விடும்.

அ. அப்படியா! சரிதான், சற்று இளைப்பாற்றி இருங்கள். இதற்குள்ளாகத் தண்ணீருக்குப் போன சத்யவந்தன்

வந்து விடுவான்! பிறகு எல்லோரும் புறப்படுவோம்.

சத்யவந்தன் வேகமாய் ஓடி வருகிறான்.

ச. ஐயனே!—நான் என்ன சொல்லப் போகிறேன்!

அ. சத்யவந்தா! என்ன? என்ன?

ச. இனி நாம் ஒருக்ஷணமும் தாமதிக்க லாகாது!—வீர சேன ராஜனுடைய சைனியங்கள் நம்மைத் தொடர்ந்து வருகின்றன. இன்னும் ஒரு கால் நாழிகைக்கெல்லாம் இங்கு வந்து விடுவார்கள்! நாம் என்ன செய்வது?

சு. ஐயோ! பிராணநாதா! பிராணநாதா! நாம் இங்கு நில்லாது ஓடிவிடுவோம் ஓடிவிடுவோம்! என் பிதா இத்தனைக் கோலம் என்னைக் கண்டதுமல்லாமல், இன்னும் வருத்த முயல்கிறாரே, ஐயோ! சீக்கிரம் போய்விடுவோம், வாரும் வாரும்!

ச. ஐயனே! அதிற் பிரயோஜன மில்லை! பகைவர் நம்மைத் துறத்தி வந்தால் சுத்த வீரர்களாகிய நாம் அவர்கள் முன் ஓடுவது நியாய மல்ல. அதுவுமன்றி நம்மால் இப்பொழுது ஓட முடியாது. நாமோ மிகவுங் களைத்திருக்கிறோம். எப்படியும் நம்மை அவர்கள் பிடித்துவிடுவார்கள், ஆதலால் இங்கே நின்று அவர்களுடன் போர் புரிவதே நலம். வேறொரு வழியு மில்லை! யுத்தகளத்தில் ஸ்திரீகள் இருக்கலாகாது ஆதலால் சீக்கிரம் சுந்தரியையும் சாகரிகாவையும் சற்று அப்புறம் அனுப்பி விடவேண்டும். [உள்ளே கூச்சல்]

அதோ வந்து விட்டார்கள்! இனி ஒரு க்ஷணப்போதும் தாமதிக்க லாகாது.—யோசிப்பதிற் பயனில்லை.—நாம்—அனுப்பிவிடுவோம் இவர்களை.

அ. ஆம்! சத்யவந்தா, அப்படியே செய்வோம். எல்லாம் தெய்வத்தின் செயல்.

ச. அம்மணி, நான் கூறியதை யெல்லாம் கேட்டீர்களல்லவா? நாமென்ன செய்யலாம் எல்லாம் சுவாமியினுடைய

கருணை. இது எப்படி முடியுமோ? எப்படி யிருந்த போதிலும் யுத்தக்களத்தில் ஸ்திரீகள் இருக்கலாகாது. ஆதலால் நீங்க ளிருவரும் சற்று அப்புறம் போயிருங்கள். நாங்கள் ஜெயித்தோமாகில், பிறகு வந்து அழைத்துச் செல்கிறோம்.

அ. சுந்தரி! கண்ணே! அப்படியே செய்வாய்.

சு. பிராணநாதா! உம்மை விட்டு நான் பிரியேன் பிரியேன்! நீர் யுத்தத்தில் ஒருவேளை யிறந்தால் நான் என்ன செய்வது? என் கதி யெப்படியாவது!

சா. பிராணநாதா! இந்த ஒரு வரம் மாத்திரம் தாங்கள் எனக்கு அருளல் வேண்டும். உம்மைவிட்டு நான் பிரியேன். உம்முடன் நானும் இறக்கிறேன்.

ச. சாகரிகா! கண்ணே! நான் சொல்லுகிறதைக் கேள். கால தாமதஞ் செய்யாதே! இதென்ன? தைரியத்தை கைவிடாதே! உன் தோழிக்கு உறுதி சொல்லி அழைத்துச் செல்வாய், வருந்தவேண்டாம். விதியை வென்றார் யார்?

சு. நாதா, நானும்மை யெப்படி பிரிந்து செல்வது? மனம் வரவில்லையே!

சா. பிராணநாதா! நான் பதிவிரதை யென்பது உண்மை யானல் நீர் இந்த யுத்தத்தில் உயி ரிழக்கமாட்டீர்.

சு. நானும் பதிவிரதை யென்பது உண்மையானல் நீர் இப்பொழுது உயி ரிழக்கமாட்டீர்.

ச. ஐயனே! அருகில் வந்து விட்டார்கள்! இவர்களை சீக்கிரம் அனுப்பிவிடுவோம்.

அ. என் கண்ணே! அதைரியப்படாதே! இதோ என் மோதிரத்தை அடையாளமாக உன் விரலி லணிந்திரு.

ச. காதற் கிளியே! உனக்கு நான் மறுபடியும் முத்த மிடும்படி வாய்க்குமோ வாய்க்காதோ! ஈசனுடைய கருணை.

கண்ணே! உன் தோழிக்குத் தேறுதல் சொல்லிச் சீக்கிரம் அழைத்துச் செல்.

[சுந்தரியை யழைத்துக்கொண்டு சாகரிகா போகிறாள்.]

அ. சேவகர்களே, நீங்களும் ஏன் வீணில் இறக்கவேண்டும். அவர்களுடன் நீங்களுஞ் சென்று அவர்களைப் பாதுகாத்துக்கொண் டிருங்கள்.

சே. நீங்கள் என்ன சொன்னபோதிலும் அப்படிச் செய்ய மாட்டோம். உங்களுடன் நாங்களும் மடியச் சித்தமாயிருக்கிறோம். எங்களைக் கொன்ற பிறகல்லவோ பகைவர் உங்களிடம் வரவேண்டும். பார்ப்போம் ஒரு கை!

ச. நண்பனே, ஜாக்கிரதையாக யுத்தஞ் செய்யவேண்டும். பகைவரோ அநேகர், நாமோ கொஞ்சம் பேர்—அதோ வருகிறார்கள்! எய்யும் அம்பை!

வீரசேனனுடைய சேனாதிபதி வீராமார்த்தாண்டனும்
மித்திரவசுவும் சைனியங்களுடன் வருகிறார்கள்.

மி. அவன்தான்! விடாதீர்கள்! விடாதீர்கள்!

[சண்டை நடக்கிறது. அதிரூபன் சில சேவகர்களுடன் யுத்தம் புரிந்துகொண்டு ஒரு புறமாகப் போகிறான். சத்யவந்தனை மற்றவர்கள் சூழ்ந்துகொள்கிறார்கள் அவன் சண்டை செய்து கடைசியில் காயப்பட்டு கீழே வீழ்கிறான்.]

மு-சே. அடே! இவன் ஒருத்தன் தாண்டா! அப்படியே புடிச்சிகினு பூடலாம் மஹாராஜா கிட்ட!

இ-சே. அடே ஒருத்தன் எத்தனெ பேரெ அடிக்கிறாம் பார்! பின்னாலே கால்லே போட்றா பூசெ!

சே. கால் ஒடிஞ்சி இன்னம் சண்டை போட்றாம் பார்.

சே. அடே! ஒத்தெ கையாலே! இன்னம் பாரு!

ச. ஆ! சாகரிகா! [மூர்ச்சையாகிறான்.]

வீர. இவன்தான் சுத்த வீரன்! கையிற் பிடித்த வாளுடன் இறந்தான்.

சே. இல்லே இல்லெ சாமி! உசிறு இருக்குது, கையெ ஆட்ராம் பாரு!

வீர. ஓஹோ! மூர்ச்சையாயினன்போ லிருக்கிறது. இது தான் சமயம். மஹாராஜா இவனை உயிருடன் கொண்டு வரச் சொன்னார். அப்படியே கயிற்றால் கட்டி இவனைத் தூக்கிக் கொள்ளுங்கள் போவோம். ஆயினும் ராஜகுமா ரத்தியைக் காணோமே! இங்குதான் இருப்பாள் தேடு வோம்.

[சேவகர்கள் சத்யவந்தனைத் தூக்கிக்கொண்டு போகிறார்கள். எல்லோரும் போனபின், முதலிலேயே இறந்ததுபோல் கீழே வீழ்ந்த மித்திரவசு, மெல்ல எழுந்திருக்கிறான்.]

மி. அப்பா! இன்றைக்கு நான் நரியின் முகத்தில் விழித்தேன்! அந்தமட்டும் காயம்பட் டிறந்தவன்போல் பாசாங்கு செய்து கீழே நான் முதலிலேயே வீழ்ந்திராவிட்டால், நான் இன்று யம புரத்திற்குச் சென்றிருப்பேன். இதோ இந்த ஒடிந்த வில்லை எடுத்துக்கொண்டு போய், மஹாராஜாவிடங் காட்டி, நான் கடும் போர் புரிந்தேன் என்று சொல்கிறேன். சேவகர்களெல்லாம் யாரையோ தூக்கிக்கொண்டு போனார்கள். அவனாகத்தா னிருக்க வேண்டும். நானும் அவர்களுடன் போகிறேன்.

[போகிறான்.]

அதிநுபன் ஒரு சேவகனுடன் சண்டை செய்துகொண்டு வந்து, ரங்கத்தில் அவனைக் கொல்கிறான்.

அ. ஆ! இதென்ன! போர்க்களத்தில் ஒருவரையுங் காணோமே! என் நண்பன் எங்கே?—ஒருவேளை போரில் மாய்ந்தானோ? ஆ! சத்யவந்தா—ஓஹோ! அவனுக்கு ஏதோ தீங்கு நேரிட் டிருக்கவேண்டும். இல்லாவிட்டால் நானழைத்ததற்கு பதில் கூறாமற் போகான். இப் பிணங்

களைப் பரிசோதித்துப் பார்ப்போம். ஐயோ! சத்ய வந்தன் எனக்காக இறந்தானே!—இதுவோ அவனுடைய உடல்?—நண்பனே! நண்பனே! என் மனஞ் சுழல்கிறது!— ஆ! தோழனே! [மூர்ச்சையாகிறான்.]

சுந்தரியும், சாகரிகாவும் வருகிறார்கள்.

சு. அடி சாகரிகா, எனக்கு நடக்கக்கூடவில்லையே! ஐயோ! நான் என்ன செய்யப்போகிறேன்? என் பிராணநாதனை இங்கு காணோமே!

சா. ஐயோ! ஒருவரையுங் காணோம். ஒரு வேளை இரண்டு பேருக்கும் ஏதாவது தீங்கு நேரிட்டதோ என்னமோ! எப்படி யிருந்தபோதிலும், அம்மா நாமென்ன செய்யலாம்? எல்லாம் விதிப்படி யாகிறது. தைரியத்தைக் கைவிடாமல் இப் போர்க்களத்தில் தேடிப் பார்ப்போம்! வா.

சு. அடி தோழி! இந்த இருட்டில் எனக்கு ஒன்றுந் தெரிய வில்லையே! ஐயோ! ஆ! இது யாருடைய உடல்?—ஆ! பிராணநாதா! [மூர்ச்சையாகிறாள்.]

சா. ஐயோ! சுந்தரியின் கதி யிப்படியா யிருந்தது! சரி! என்னுடைய கதியும் அப்படித்தான் போலும். தேடிப் பார்க்கிறேன்.

சு. [மூர்ச்சை தெளிந்து] ஆ! பிராணநாதா! பிராணநாதா! இதுவோ உம்மைடைய விதி! நீர் இப்படி இறக்க வேண்டுமென்று பிரமன் விதித்தானே! ஐயனே! ஐயனே! உம்மை நான் மறுபடியும் எப்பிறப்பிற் காணப் போகிறேன்? ஐயோ! மஹா பாபியாகிய நான் உம்மை இக் கதிக்கு ஆளாக்கினேனே! பிராணநாதா! பிராணநாதா என்னுடன் இன்னும் ஒரு வார்த்தையாவது பேசலாகாதா? ஐயோ! நான் இங்கு வருந்தி அநாதையாய் அழுகிறேனே! ஏன் அழுகிறு யென்றாவது என்னைத் தாங்கள் கேட்கலாகாதா? உமது உடம்பினின்றும் இன்

னும் கூடு போகவில்லையே! உம்முடைய மதி போன்ற முகமானது இரத்தக் கறை பட்டு அழுக்கடைந் திருக்கிறதே! உம்மைக் கொல்லவென்று எந்த பாபி பிறந்திருந்தானோ? உம்மைக் கொன்ற பாணம் என்னையுங் கொன்றிருக்கலாகாதா? பிராணநாதா! ஒரு க்ஷணப்போதும் உம்மைப் பிரிய விரும்பாத அடியாளைப் பிரிந்து சுவர்க்கத்திற்குச் செல்ல உமக்கு மனம் எப்படி வந்ததோ? உமது உயிர் நீங்கும் பொழுது என்னை நினைத்தீரோ? உலகத்தை வெறுத்தீரோ! பரமனை நொந்தீரோ? விதியை நிந்தித்தீரோ! அல்லது சுவர்க்கத்தை விரும்பி பூமியைக் கடிந்துச் சென்றீரோ! ஐயனே! ஐயனே! நான் படுந்துயரம் நீர் சற்றேனு மறிகிலீரோ! இக் கோலம் நீர் என்னை காண்பது நியாயமா? ஐயோ! இதுவோ! என் தலையிலெழுதிய விதி! ஈசனே! ஈசனே!

சா. ஐயோ! நான் இவ்வளவு நேரம் தேடியும் எனது நாயகனைக் காணவில்லையே! சாகரிகா என்று அழைத்த குரலை மாத்திரம் நான் கேட்டேன்!—ஓஹோ! ஒரு வேளை பகைவர் அவரைச் சிறையாகப் பிடித்துச் சென்றார்களோ! அப்படி யிருந்தாலு மிருக்கலாம். அநேகஞ் சேகவர்களாகக் கூடி இறைச்சலிட்டுக்கொண்டு இப்பக்கமாகச் சென்றார்கள்—ஆம், அப்படித்தா னிருக்க வேண்டும்—இந்தப் பக்கம் போய் பார்க்கிறேன். ஐயோ! இந்த சமயத்தில் சுந்தரியைத் தனியாக விட்டுப் பிரியும்படி நேரிட்டதே! ஆயினும் நான் என்ன செய்வேன்? எனது பிராணநாதனை நான் சீக்கிரம் காணுவிட்டால் என துயிர் நீங்கிவிடும். அம்மா! நான் போய் வருகிறேன். ஈசனே! நீயே கெதி! உன்னையே நம்பினேன்.

[போகிறாள்.]

சு. ஆ! நான் இனி அழுது என்ன பயன்? இறந்த எனது பிராணநாதர் உயிர்பெறப் போகிறாரா? இல்லையே!—பிராணநாதா! நான் உம்மைப் பிரிந்திருக்கமாட்டேன்

பிரிந்திருக்கமாட்டேன்! இதோ நீர் சென்ற விடத்திற்கு நானும் வருகிறேன். உம்மைப் பிரிந்து உயிர் வாழ்வதை விட உம்முடைய உடைவாளினால் நானும் இறந்து உம்மைக் கூடுவதே நலம்—ஆ! என்ன! இப்பொழுது இந்த கை அசைந்தாற்போ லிருக்கிறதே! உயிரோடிருக்கிறாரா என்ன? பிராணநாதா! பிராணநாதா!

அ. [மெல்லிய குரலுடன்] சுந்தரி.

சு. பிராணநாதா! இன்னொரு தரம் அழையுமே! இன்னொரு தரம் அழையுமே! ஆ! பிராணநாதா! நீர் உயிரோ டிருக்கிறீரா!

அ. சுந்தரி, இதென்ன நான் கனவு காண்கிறேனே?—நான் எங்கிருக்கிறேன்?

சு. இல்லை! இல்லை! அவ்வளவும் நினைவுதான். அந்தமட்டும் உயிர்பெற் றெழுந்தீரே! அவ்வளவும் நினைவுதான் அந்த மட்டும் உயிர்பெற் றெழுந்தீரே! இவ்வளவும் நான் செய்த புண்ணியத்தின் பலனேயாம்.

அ. ஆ! இப்பொழுதுதான் ஞாபகம் வருகிறது! நான் இந்நேரம் மூர்ச்சையா யிருந்தேன்! என்னுடைய நண்பன் எங்கே?

சு. ஐயனே, சாகரிகா இந்நேரம் அவரைத் தேடிக்கொண்டிருந்தாள். இப்பொழுது அவளையும் காணோம்—இரண்டு பேரையுங் காணோமே. பிராணநாதா! இந்த பயங்கரமான இடத்தை விட்டு சீக்கிரம் அப்புறம் போவோம்.

அ. என்னுடைய தோழன் இறந்து விட்டானென்று நினைக்கிறேன்.—எப்படியும் அவனுடைய உடலைத் தேடி எடுத்துத் தகனஞ் செய்தபிறகே நாம் இவ்விடத்தை விட்டுச் செல்லவேண்டும். எனக்காகத் தன் னுயிரையும் இழந்த

நண்பனுக்கு அவ் வுதவியும் நான் செய்யாமற் போவேனாகில் அது துரோகமாம் நாம் தேடிப் பார்ப்போம் வா.

[தேடிக்கொண்டு போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

---

## இரண்டாம் காட்சி

இடம்—ஜெயந்தன் அரண்மனையில் ஓர் அறை.

வசுமதி சயனித்துக்கொண்டிருக்க, அருகில் லலிதை நின்றுகொண் டிருக்கிறாள்.

வ. அடி பாங்கி, அதிரூபனைப்பற்றி ஏதாவது சமாசாரம் வந்ததா ?

ல. அம்மா !, இன்னும் ஒன்றும் வரவில்லை. ஆனாலும் தாங்கள் அவரைக் குறித்து கவலைப்பட வேண்டியதில்லை எப்படியும் அவர் சீக்கிரம் திரும்பி வருவார்.

வ. ஐயோ ! என் குழந்தையை நான் விட்டுப் பிரிந்து ஒரு மாச மாச்சுதே ! தினம் நாளைக்கு வருவான் நாளைக்கு வருவான், என்று எண்ணி, இந்த ஒரு மாதத்தையும் கழித்து விட்டேனே ! அதிரூபனை நான் மறுபடியும் எப்பொழுது காணப்போகிறேன் ! அவன் அறியாத குழந்தை யாச்சே ! மஹாராஜா எப்படி மனந் துணிந்து இதற்குள்ளாக அவனைக் கொடிய மிருகங்கள் வாழும் காட்டிலே வேட்டை யாடும்படி அனுப்பினாரோ ? இன்னுந் திரும்பி வராதபடியால் அவனுக்குக் காட்டு மிருகங்களால் ஏதோ தீங்கு நேரிட் டிருக்கவேண்டுமென்று நினைக்கிறேன்.—

ல. அம்மா, அப்படி ஒன்றும் நேரிட் டிராது. சத்யவந்தனும் அவருடன்போ யிருக்கிறானே, சத்யவந்தன் எப்படியும் அவருக்கு ஒரு துன்பமும் நேரிடாதபடிக் காப்பாற்றுவான் என்பதற்குச் சந்தேக மில்லை.

வ. சத்யவந்தன் ஒருவனுல் என்ன முடியும்? அதிரூபா! என் கண்மணியே! நா னுன்னை எப்பொழுது காணப் போகிறேன்? ஐயோ! காட்டு மிருகங்களால் கொல்லப் பட்டாயோ? அப்படிக் கொல்லப்படும்பொழுது என்னை நினைத்து அழுதாயோ? உன் பிதாவை நிந்தித்தாயோ? விதியை நொந்தாயோ? அல்லது ஒரு வேளை காட்டில் வழி தெரியாது அகப்பட்டுக்கொண்டு திரிந்து திரிந்து வருந்துகிருயோ? கண்ணே! கண்ணே! நான் உன்னை எப்பொழுதடா காணப் போகிறேன்?

ல. அம்மா, தாங்க ளிவ்வாறு துக்கப்படலாகாது. உம் முடைய குமாரர் ஒரு குறையு மின்றி சீக்கிரம் உம்மிடம் வருவார். என் வார்த்தையைப் பாரும். இளவரசர் சத்யவந்தன் இருவருமாகக் கூடித் தேச சஞ்சாரஞ் செய்கிருர்களென்று நான் நினைக்கிறேன்.—

விதூஷகன் திடீரென்று வருகிருன்.

வி. ஆமாம், அதுதான் நானும் நினைக்கிறேன்.

வ. விதூஷகரே, உட்காரும். அதிரூபனைப்பற்றி ஏதாவது கேள்விப்பட்டீரா?

வி. ஓ! கேள்விப்பட்டேன்.

வ. அப்படியா? என்ன என்ன சமாசாரம்?

வி. வேட்டையாடப் போனவர் இன்னும் வரக் காணும். அதுதான் கேள்விப்பட்டேன்.

வ. விதுஷகரே, இப்பொழுது விளையாடவேண்டாம். அவன் எப்பொழுது திரும்பி வருவான் தெரியுமா?

வி. அவர் இதற்குள்ளாக வந்து விடுவாரா? வேட்டையாடப் போகிறேனென்று சொல்லி இதுதான் சாக்கென்று ஊரெல்லாஞ் சுற்றிப் பார்த்துவிட்டு வருவார், பாரும்.

வ. ஐயோ! நான் என் குழந்தை பிரிந்ததற்காக விசனப் பட்டுக்கொண் டிருந்தால் அது உமக்கு விளையாட்டாக இருக்கிறதோ?

வி. அம்மணி இதற்காகத் தாங்கள் வியசனப்படுவானேன்? சந்தோஷமல்லவோ படவேண்டும். எப்படியும் இளவரசர் சீக்கிரம் வரப்போகிறார். வரும்பொழுது சும்மாக வா வருவார்? தன்னுடன் யாராவது ஒரு ராஜ குமாரத்தியையும் அழைத்துக்கொண்டு வருவார். நான் சொன்னேனே பாரும் இதோ, மஹாராஜா வருகிறார்.

ஜெயந்தன் வருகிறான்.

ஜே. விதூஷகரே, என்ன விசேஷம்?

வி. எல்லாம் விசேஷந்தான். ராஜ ஸ்திரீ தன் புத்திரன் வராததற்காக வியசனப்பட்டுக்கொண் டிருந்தார்கள். நான் தேறுதல் சொல்லிக்கொண் டிருந்தேன்—உம்மீது ராஜ ஸ்திரீ கோபங்கொண் டிருக்கிறாற்போலத் தோணுகிறது.

ஜே. வசுமதி, நடந்துவிட்ட விஷயத்தைப்பற்றி நாம் இனி வருத்தப்படலாமோ? நான் என்ன செய்வேன்? இம்யாதிரியாக வருமென்று தெரிந்திருந்தால் அதிரூபனை வேட்டைக்கு அனுப்பியிருப்பேனு? என்மீது அதற்காக நீ வீணுகக் கோபங் கொள்வதிற் பய னில்லை.

வ. அதிரூபனை நான் சீக்கிரம் காணுவிட்டால் என் னுயிர் போய்விடும். எப்படியாவது அவனை நான் சீக்கிரம் பார்க்கவேண்டும்.

வி. அப்பா! கோபந் தணிந்து போய்விட்டதையா! இனிமேல் சொல்லும், மஹாராஜா.

ஜே. வசுமதி, அதைக் குறித்து உன்னுடன் ஆலோசிப்பதற்கே வந்தேன். நான் தேட்விட்ட சேவகர்களெல்லாம் காணேமென்று சொல்லித் திரும்பி வந்துவிட்டார்கள். தெற்குப்புறம் சென்றவர்கள் மாத்திரம் வரவில்லை. இனி நாம் தாமதிப்பதிற் பய னில்லை. நாமாக நமது பரிவாரங்களுடன் சென்று தெற்குப் புறத்தில் தேடுவோமென்று தீர்மானித்திருக்கிறேன். நமது பரிவாரங்க ளெல்லாம்

சித்தமா யிருக்கின்றன. நீ என்னுடன் வருகிறாயா போவோம்?

வ. பிராணநாதா, இது நல்ல யோசனையே. ஒரு க்ஷணமும் தாமதியாது புறப்பட்டுப் போவோம்—எப்படியாவது என் கண்மணியை நான் கண்டால் போதும்.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

## மூன்றும் காட்சி

இடம்—ஓர் சிறைச்சாலை.

சத்யவந்தனை உள்ளே அடைபட் டிருக்கிறான்.

வெளியில் ஒரு சேவகன் காவலிருக்கிறான்.

ச. ஆ! சக்ரவர்த்தியினுடைய பிள்ளைக்கு உயிர் நண்பனாக இருந்து, அவனுடன் எல்லாச் செல்வங்களையும் அனுபவித்துக் கொண்டிருந்த நான், இப்பொழுது ஒரு அற்ப கைதியைப்போல சிறைச்சாலையில் ஊணுறக்க மின்றி விலங்குகள் பூட்டப்பட்டுக் கிடக்கும்படி நேரிட்டதே! ஐயோ! இதுவோ என் தலையில் எழுதிய விதி! நான் இந்த சிறைச்சாலையில் அகப்பட்டு இருபது இருபத்தைந்து நாட்களாய்விட்டனவே! இதுவரையில் நான் பட்ட துயரம் கொஞ்சமல்லவே! மஹா பாதகர்களாகிய இங்குள்ள காவலாளர்கள் என்னை ஹிம்சித்தது நரக வாதனை யென்றே சொல்லவேண்டும்! வேளைக்குத் தக்க ஆகாரமாவது கொடுக்கிறார்களா? அதுவு மில்லையே! நான் நாவறண்டு தண்ணீர் தண்ணீர் என்று கெஞ்சிக் கேட்கும்பொழுது, ஒரு துளி ஜலம் கொடுத்தாலுங் கொடுப்பார்கள், ஒருவேளை இல்லாவிட்டாலும், இல்லை! இப்மட்டோ! என் கைகளிலும் கால்களிலும் இப் பாரமான விலங்குகளைப் பூட்டி யிருக்கிறார்கள். இவ் விலங்குகளைத் தூக்கிக்கொண்டு எழுந்திருக்கவும் என்னாலாக

வில்லையே! ஐயோ! இத் துயரங்களை யெல்லாம் இனி எத்தனை நாள் பொறுப்பேன்? ஈசனே! இனி இத் துயரம் என்னால் பட்டு முடியாது! இத் துயரத்தினின்றும் நீக்கி, என்னை உன் பாதங்களில் சேர்த்துக்கொள்ளலாகாதோ! என்னை நீர் இவ்வாறு பரிசோதிப்பது ஞாயமோ? இதுவரையில் நான் பட்டதெல்லாம் போதாதோ? இனியேனும் உம்முடைய மனம் இரங்கலாகாதோ? நான் இச் சிறைச்சாலையி லிருந்து அழுத கண்ணீரானது கைகளி லிருக்கும் விலங்குகளையும் சற்றுக் கரைத்துவிட்டதே, உம்முடைய மனம் மாத்திரம் கரையாதது எவ்வண்ணமோ! ஐயனே! ஐயனே! நான் இதுவரையில் அனுபவித்த துன்பம் போதும்! போதும்! இனி நீர் என்னைப் பரிசோதிக்கலாகாது! ஆகாது! ஈசா! ஈசா! உன் மன மிரங்காயோ இனியேனும்!—ஐயோ! இவைகளெல்லாம் இருக்கட்டும். நான் தேகத்தினால் அனுபவிக்கும் இத் துன்பங்களெல்லாம் என் மனத் துயரத்தில் ஆயிரத்தி லொரு பங்கு ஆகாதே! என் மனமானது சஞ்சல மில்லாமல் இருந்தால் மற்றெதையும் நான் பாரேனே! ஆ! என் மனோ வியாகூலத்தை என்னென்று சொல்லுவேன்? யாருடனே சொல்லி யாறுவேன்? ஜகதீசா! நீ எல்லா மறிந்திருந்தும் உன்னிடமே நான் சொல்லி யழுகிறேன், கேட்பாய்—என்னுடைய நண்பன் இப்பொழுது எந்த ஸ்திதியிலிருக்கிறானோ தெரியவில்லையே! அவன் உயிரோ டிருக்கிறானோ? அல்லது அந்த யுத்தத்தில் மாய்ந்தானோ? அன்று முதல் இன்று வரையில் அவனைப்பற்றி ஒரு சமாசாரமும் எனக் கெட்டவில்லையே! ஒரு வேளை யிறந்து விட்டானோ! என்னமோ? ஐயோ! ஒரு வேளை உயிருட னிருந்தால் என்னைக் காணாது எவ்வளவு வருந்தி யிருப்பான்? ஆ! நண்பனே! உன்னை நான் எந்த ஜன்மத்தில் காணப் போகிறேன்? ஐயோ! இவ்வளவு துயரம் அந்த சபதத்தினா லல்லவா வந்தது! அப்பொழுதே நான் வேண்டாமென்று கூறினேனே!

பிடிவாதமாய்க் கூடாதென்று என்னை எதிர்த்தாயே! இனி என்ன செய்யலாம்? ஒருகால் என் நண்பனுக்கு தீங்கு நேரிட்டிருக்குமாயின் சுந்தரியின் கதி என்ன வாகும்! சுந்தரி இப்பொழுது எங்கிருக்கிருளோ? சேவ கர்கள் எங்கு தேடியும் அகப்படவில்லையென்று திரும்பி விட்டார்களாம். ஐயோ பாவம்! ராஜ குமாரத்தியாகப் பிறந்தும் சுந்தரி எவ்வளவு துன்பம் அனுபவிக்கும்படி நேரிட்டது. விதியைக் கடந்தார் யார்! ஐயோ! இவைக ளெல்லாம் இருக்கட்டும். என் கண்மணியாகிய சாக ரிகையை நினைக்கும்போதெல்லாம் அனலிற்பட்ட மெழு கைப்போல் என் மனம் உருகுகிறதே! ஆ சாகரிகா! என்னை நம்பி, நானே துணையென்று பற்றி, உனது தாய் தந்தையர் சுற்றத்தாரை யெல்லாம் விட்டுப் பிரிந்து, என் னைத் தொடர்ந்து காட்டி அழுன்றபோதிலும் சற்றேனும் மனங் கோணுது என் சொற்படி நடந்த உன்னைத் தனி யே அலையவிட்டேனே! உன்னை இக்கோலங் காட்டிய நான் படுந் துயரம் நீ அறிவாயோ!—ஐயோ! எனது காதலி என் பிரிவைக் குறித்து என்ன வருந்துவாள்! என்ன வருந்துவாள்! ஒருகால் நான் இறந்தேன் என்று கருதினளோ! அப்படி நான் இறந்ததாக எண்ணி யிருந் தால் தானுந் தன் உயிரை மாய்த்துக்கொள்வாள் என்ப தற்கு சந்தேக மில்லை. நான் உயிரோடிருக்கிறேனென் று கூறி என் காதலிக்குத் தேறுதல் சொல்லவும் சக்தி யற்றவனுக இருக்கிறேனே! ஆ! சாகரிகா! உன்னை நினைத்து நான் வருந்தாத நிமிஷமும் உண்டோ! உனது முகாரவிந்தத்தை நான் எப்பொழுது கண்டு களிக்கப் போகிறேன்? என் கண்களை நான் மூடும்போதெல்லாம் என் முன்பாக நீ தோற்றுகிருயே! உன்னை நேரில் நா னெப்பொழுது காணப் போகிறேனே! ஆ! சாகரிகா! சாகரிகா!— என்னுடைய சொந்த ஸ்திதியைப்பற்றி சற்று ஆலோசிக்கிறேன்—நானே, நடுக் கடலில் பெருங் காற்று மழையில், தனது கப்ப லகப்பட்டு, துண்டு துண்

டாயுடைய, அத் துண்டுகளி லொன்றைப் பற்றி மிதந்து கொண் டிருக்கும், ஒரு மானுடியானவன் அத் துண்டமும் தண்ணீரி லமிழ, தன்னை ஒரு பெரிய சுரு மீன் தனது கோரமான வாயைத் திறந்துகொண்டு கவ்வ வரும் பொழுது, எந்த சுகமான மனஸ்திதியி லிருப்பானே, அந்த ஸ்திதியி லிருக்கிறேன்! மஹாராஜாவோ நான் உண்மையைக் கூறுவிட்டால் கொன்றுவிடுவதாகத் தினம் பய முறுத்துகிருர்! நான் எப்படி உண்மையைக் கூறுவது? நானே அச் சபதத்தினல் கட்டுண் டிருக்கிறேன். அக் காலம் கழியு மளவும் நான் இன்னுனென்று வெளியிட லாகாதே! நான் என்ன கூறியும் தனது குமாரத்தியைச் சிறையினின்றும் மீட்டு அழைத்துச் சென்றவன் நானே யென்று நினைக்கிருர். இந்த தர்ம சங்கடத்திற்கு நான் என்ன செய்வது? நல்லது, அப் பிரதிக்ஞை என்றுடன் முடிகிறதெனப் பார்ப்போம்.—ஆ! நாளைத்தினம் சாயங்காலம் சரியாக நான்கு மணிக்கு முடிவு பெறுகிறது. அப்புறம் நான் எல்லாவற்றையும் வெளியிடலாமல்லவா! ஆயினும் அதற்குள் என்னை மஹாராஜா கொன்றுவிடும்படிக் கட்டளை யிட்டால் என்ன செய்வேன்? இல்லாவிட்டாலும், நான் இன்னுனென்று அவருக்கு எப்படி ரூபிப்பது? ஐயோ! எனது நண்பனுடைய முத்திரை மோதிர மிருந்தாலும் எனக்கு உபயோகப்படும். அதனை நான் எப்படி இப்பொழுது பெறப் போகிறேன்? முடவன் கொம்புத் தேனுக் காசைப்படுவதேயாம். இத் துயர்க் கடலினின்றும் கரையேற ஒரு மார்க்கமும் எனக் ககப்பட வில்லை. ஐயோ! என் காதலி சாகரிகை எனது பக்கத்தில் இப்பொழுது இருப்பா ளானல் எனக்கு ஒரு யுக்தி கூறுவாளே! ஆ! சாகரிகா! சாகரிகா! [மூர்ச்சையாகிருன்.]

சிறைச்சாலைக்கு வெளிப்புறம் சாகரிகை வருகிருள்.

சா. அப்பா! அப்பா!

சே. யார் அது ? பெண்பிள்ளைக்கு இங்கு என்ன வேலை, போ !

சா. அப்பா, என்னை உனக்குத் தெரியாதா ? நான் உன் அத்தை யாயிற்றே !

சே. அது யார் அது ! எனக்கு அத்தையு மில்லை ஒன்றுமில்லை, போ ! இங்கு நில்லாதே !

சா. ஐயோ ! இதற்குள்ளாக என்னை மறந்துவிட்டாயோ ? நான் உன்னைச் சிறு வயதில் எடுத்து வளர்த்த அத்தை யாயிற்றே ! உன் மாமா உனக்கு நூறு ரூபாய் கொடுத்து விட்டு, க்ஷேமம் விசாரித்து வரச் சொன்னார்.

சே. நூறு ரூபாயா !—எதோ ?

சா. இதை உன்னிடம் கொடுத்து நீ என்னமாக இருக்கிறு யென்று பார்த்துவிட்டு வரச் சொன்னார்.

சே. அப்படியா !—அத்தை ! நிரம்ப சந்தோஷம். மாமா க்ஷேமந்தானு ?

சா. க்ஷேமந்தான்—நீ இங்கே என்ன செய்கிறு யப்பா ?

சே. இது சிறைச்சாலை, நான் காவல் காத்துக்கொண் டிருக் கிறேன்.

சா. சிறைச்சாலையா ! நான் இதுவரையில் பார்த்ததே யில்லை, நான் உள்ளே சென்று பார்க்கலாமா ?

சே. ஐயோ ! மஹாராஜா ஒருவரையும் இங்கு உள்ளே விடக் கூடாதென்று கட்டளையிட் டிருக்கிறுரே !

சா. இருந்தா லென்ன ? ஒரு நிமிஷத்துக்குள் என்னமாக இருக்கிறதென்று பார்த்துவிட்டு வருகிறேன். ரூபாயை பத்திரமாக முடிந்துகொள்ளப்பா !

சே. பத்திரமாகத்தான் வைத்திருக்கிறேன், சீக்கிரம் உள்ளே போய்ப் பார்த்துவிட்டு வாருங்கள்.

[சிறைச்சாலைக் கதவைத் திறந்து சாகரிகையை உள்ளே விடுகி ருன்.]

சா. என் பிராணநாதர் அடைக்கப்பட் டிருப்பது இந்த இடந்தானு? அது யார்? இவரோ என் காதலர்? ஆம்! அதற்குச் சந்தேக மென்ன! நித்திரை செய்கிறுர்போ லிருக்கிறது. ஐயோ! முன் எந்த ஸ்திதியி லிருந்தவர் இப்பொழுது எந்த ஸ்திதியி லிருக்கிறுர்? இவரை அடையாளங் கண்டு பிடிப்பதே கடினமாம்படி இவருடைய மேனி எவ்வளவு மாறி யிருக்கிறது! ஐயோ இந்த ஸ்திதியிலும் இவரை நான் காணும்படி நேரிட்டதே! கால தாமத மாகிறது. எழுப்புகிறேன்—பிராணநாதா! பிராணநாதா!

ச. ஆ! சாகரிகா! இதென்ன, நான் கனவு காண்கிறேனே?

சா. இல்லை இல்லை!

ச. சாகரிகா! எப்படி உள்ளே வந்தாய்? என் நண்பனும் சுந்தரியும் உயிரோ டிருக்கிறுர்களா?

சா. [ஒரு புறமாக] இப்பொழுது பொய் பேசியே தீரவேண்டும் — ஆம், சுகமாகவே யிருக்கிறுர்கள்.

ச. ஐயோ! கண்ணே! என்னுடைய இக் கோலத்தைக் காணவோ வந்தாய் நீ? நீயும் நான் படுந் துயரத்தை அநுபவிக்கவோ வந்தாய்!

சா. பிராணநாதா! அதைரியப்பட வேண்டாம்! உம்மை இந்தச் சிறையினின்றும் மீட்க வழி தேடவே நா னிங்கு வந்தேன்.

ச. ஐயோ! அது வீண் யோசனை. இவ் விலங்குச் சங்கிலிகளெல்லாம் நன்ருகப் பூட்டப்பட் டிருக்கின்றன. அவைகளைக் கழற்றினு லொழிய என்னுல் எழுந்திருக்கவும் முடியாது. அவைகளை நீக்க நான்கு ஐந்து பலத்த ஆட்கள் வேண்டுமே!

சா. ஆ! ஆனல் நான் என்ன செய்வது?

ச. சாகரிகா! இந்த மோதிரம் ஏது உனக்கு!

சா. பிராணநாதா, அது உம்முடைய தோழருடையது. அவர் யுத்தத்திற்குப் போகும்பொழுது சுந்தரிக்குக் கொடுத்தாரே ஞாபக மிருக்கிறதா? சுந்தரி தன் விரலி லணிந்தால் நழுவி விழுந்து விடுகிறதென்று என்னை வைத்திருக்கச் சொன்னுள்—ஏன் அதைக் கேட்கிறீர்?

ச. சாகரிகா! அதன் மகிமை உனக்குத் தெரியாது. இப்படிக் கொடு அதை எனக்கு. ஈசனே! எல்லாம் உமது அருள்! இம் மோதிரம் என் னுயிரைக் காப்பாற்றப் போகிறது!

சா. அப்படியா? அதை யென்ன செய்யப் போகிறீர்?

சே. அத்தை, பார்த்தாச்சுதா? நேரமாகிறதே.

சா. இதோ வந்து விட்டே னப்பா—பிராணநாதா, இச் சேவகனை ஏமாற்றிவிட்டு வந்தேன்—நான் சீக்கிரம் போக வேண்டும்.

ச. அப்படியானல் கண்ணே, சுகமாய்ப் போய்வா! இனி நீ என்னைக் குறித்து கவலைப்படவேண்டாம்; நாளைத்தினம் நான்கு மணிக்குமேல் அரச சபைக்கு வா. நான் சிறையினின்றும் விடுபடுவேன். சாகரிகா, இப்பொழுது செய்த உபகாரத்திற்கு நான் என்ன கைமாறு செய்யப் போகிறேன்!

சே. அத்தை, நேரமாகிறதே!

சா. இதோ வந்துவிட்டேன். பிராணநாதா, எப்படியாவது நீர் சிறையினின்றும் மீண்டாற் போதும், நான் நாளைத் தினம் உம்மைக் காண்கிறேன்.

[கதவருகில்வர சேவகன் கதவைத் திறந்து அவளை வெளியே விடுகிறன்.]

சே. என்ன! அத்தை நிரம்ப நாழி பார்த்தாற்போ லிருக்கிறது.

சா. ஆமாம், போய் வருகிறே னப்பா.

சே. அத்தை, இந்த ரூபாய், கொஞ்சம் சொத்தை, இதோ பாருங்கள்—ஆனாலும் மாமாவை நான் விசாரித்ததாகச் சொல்லுங்கள். அந்தப் பெண் விஷயம்—கொஞ்சம் ஞாபக மிருக்கட்டும்.

சா. அப்படியே அப்பா. [போகிறாள்.]

காட்சி முடிகிறது.

## நான்காம் காட்சி

இடம்—வீரசேன மஹாராஜனுடைய தர்பார்.

வீரசேனன் சிம்ஹாசனத்தில் வீற்றிருக்கிறார்.

இருபுறத்திலும் மதிப்யூகி, சுவிசாரி, முதலிய மந்திரிகள் வீற்றிருக்கின்றனர்.

மித்திரவசு, விரமார்த்தாண்டன், சுவிசாரியி னருகில் இருக்கிறார்கள்.

எதிர்புறமாக கோந்தவால் நிற்கிறான்.

சேவகர்கள் புடைசூழ்ந்து நிற்கின்றனர்.

வீ. சேனாதிபதி, இன்றைக்குச் சுந்தரியைப் பற்றி ஏதாவது சமாசாரம் வந்ததா? அவளைத் தேடிச் சென்ற சேவகர்களில் யாராவது திரும்பி வந்தார்களா?

வீர. மஹாராஜா, எல்லோருந் திரும்பி வந்துவிட்டார்கள். ஆயினும் ஒருவனும் தங்களுடைய குமாரத்தியைப் பற்றிச் சமாசாரங் கொண்டு வரவில்லை. என்ன தேடியுங் காணோ மென்கிறார்கள்.

வீ. என்ன ஆச்சரியம்! சுந்தரி ஒருகால் இறந்துவிட்டாளோ? அப்படி யிருக்காது, அந்தப் பாதகன் அவளை எங்கேயோ ஒளித்து வைத்திருக்கவேண்டும். மந்திரி, இனி சும்மா யிருப்பதிற் பய னில்லை. அந்தச் சிறையி லிருக்கும் பாதகனை வரவழைத்து இன்றைத்தினம்

எப்படியாவது உண்மையை அவனிடமிருந்து அறிய வேண்டும். அப்படி அவன் உண்மையைக் கூறிவிட்டால் அவனுக்கு தக்க சிக்ஷை செய்து வைக்கவேண்டும். கொத்தவால்!

கோ. மஹாராஜா!

வீ. கைதியை சீக்கிரம் அழைத்துவா—ஜாக்கிரதையாக அழைத்து வாருங்கள்—தப்பி யோடப் போகிறான்!

[கொத்தவால் போகிறான்.]

சு. மஹாராஜா, தாம் நன்றாய் விசாரித்த பிறகே சிக்ஷை செய்யவேண்டும்; அவசரப்படலாகாது.

வீ. சுவிசாரி, அதற்கென்ன, தீர விசாரியாது தண்டனை விதிப்பேனோ?

சில சேவகர்கள் சத்யவந்தனை இரும்புச் சங்கிலிகளால் கட்டி அழைத்துக்கொண்டு வருகின்றனர்.

கோத்தவால் பின்னால் வருகிறான்.

சே. நடடா, சீக்கிரம் நட!

ச. அப்பா! இந்த பாரமான விலங்குகளைத் தூக்கிக்கொண்டு நடக்க என்னால் முடியவில்லையே! ஏனப்பா, என்னை வீணாக வருத்துகிறீர்கள்?

சே. போ என்றால், பேசுகிறாயா?

வீ. மந்திரி, இவனை நான் பார்க்கும்போ தெல்லாம், இவனுடைய முகத்தை நான் முன்பே கண்டிருப்பதாகத் தோணுகிறது. இவன் முகம் சாதாரணமான கைதியின் முகம்போலத் தோற்றவில்லை.

சு. மஹாராஜா, எனக்கும் இவனைப் பார்க்கும்பொழுது குற்றவாளியாகத் தோற்றப்பட வில்லை.

ம. ஐயனே, அப்படியல்ல, இவன் மஹா திருடன், மிகவும் பாசாங்கு செய்கிறானே யொழிய வேறொன்று மில்லை.

வீ. அதிருக்கட்டும், மித்திரவசு, இவன்தான் சுந்தரியை மயக்கி அழைத்துச் சென்ற கொடியவன் என்று உறுதியாகக் கூறுவாயா நீ?

மி. மஹாராஜா, நான் நிஜமாக சொல்ல முடியாது. ஆயினும் அதற்குச் சந்தேக மில்லை. இவனை இதற்கு முன்பாக நான் பார்த்திருப்பதாக ஞாபக மிருக்கிறது.

வீ. அப்படியா, இனி கைதியை நேராக விசாரிப்போம். அடே! நான் கூறுவதைக் கவனமாகக் கேள்! நான் இப்பொழுது கேட்கப் போகிறது கடைசி முறை, அப்புறம் உன்னைக் கேட்கமாட்டேன். இப்பொழுதாவது உண்மையைக் கூறிவிடு. இன்றைக்கும் உண்மையை ஒளிப்பாயானல் உன்னை சிரசாக்ஞை செய்துவிடும்படி கட்டளையிடப் போகிறேன். ஜாக்கிரதை! இப்பொழுது சுந்தரி எங்கிருக்கிருள் உனக்குத் தெரியுமா?

ச. தெரியாது.

வீ. பொய் பேசுகிருய்! பொய் பேசுகிருய்! பத்திரம்!

ச. மஹாராஜா, இது உண்மையே,

வீ. சரி! அதிருக்கட்டும், நீ தானே சுந்தரியைச் சிறைச்சாலையினின்றும் அழைத்துச் சென்ற திருடன்?

ச. மஹாராஜா, நா னழைத்துச் செல்லவில்லை.

வீ. பின்பு யாரழைத்துச் சென்றது தெரியுமா?

ச. தெரியும்.

வீ. அது யார்?

ச. ஐயனே, நான் இதற்கு முன்பாக பலதரங் கூறியிருக்கிறேனே! சுந்தரியை அழைத்துச்சென்றவர் எனது நண்பர், அவரும் நானும் செய்துகொண்ட சபதம் நிறைவேறுமளவும், எங்களுடைய பெயரை நாங்கள் வெளியிடலாகாது.

ம. மஹாராஜா, நான் முன்னமே கூறினேனே! இவன் மஹா திருடனச்சே! இவனுவது பிரதிக்ஞை செய்வதா

வது? எப்படியாவது தப்பித்துக்கொள்ளலாமெனப் பார்க்கிறான்.

வீ. அடே! நான் கேட்பதற்கு உண்மையைக் கூறமாட்டாயா? சிக்ஷை விதிக்கவா? என்ன சொல்லுகிறாய்?

ச. மஹாராஜா, தங்களுடைய இஷ்டம். [ஒரு புறமாக] ஐயோ! இன்னும் நான்கு மணியாகவில்லையே!

சு. மஹாராஜா, சிக்ஷை விதிப்பதன்முன் எல்லா சமாசாரங்களையும் யோசித்து, பிறகு அப்படிச் செய்யவேண்டும். இவனுடைய முகத்தை நோக்குமிடத்து இவன் சத்யவந்தன் என்று அறியாத குழந்தையுங் கூறிவிடும். இவன் இதுவரையிலுங் கூறியதில் ஒரு அசத்தியமும் இல்லை என்று எனக்குத் தோன்றுகிறது. மஹாராஜா, தாங்களே சற்று முன்பாக, இவன் சாதாரண கைதிகளைப்போல் காணப்பட வில்லை யென்று கூறினீர்! அது நிற்க, இவன்மீது என்ன குற்ற மிருக்கிறதெனப் பார்ப்போம். மித்திரவசுவோ, இவன் தான் தங்களுடைய குமாரத்தியை அழைத்துச் சென்றவனென்று நிஜமாகக் கூற முடியாதெனச் சொல்லிவிட்டார். வேறொருவரும் சுந்தரியை இவன் அழைத்துச் செல்லும் போது கண்டதாக சாக்ஷி சொல்லவில்லை. ஆதலால் இவன்தான் குற்றவாளி என்று கூற அத்தாக்ஷி யில்லை. அதுவுமன்றி, இவன் தனது நண்பன்தான் அவ்வாறு செய்ததாகக் கூறுகிறான். ஆதலால் மஹாராஜா, இவைகளை யெல்லாம் தீர்மானிப்பதன்முன், தாங்கள் சிக்ஷை விதிக்கலாகாது. அதுவுமன்றி, இவன் ஏதோ சபதஞ் செய்திருப்பதாயும், அச் சபதம் நிறைவேறு மளவும் தன்னுடைய பெயரையும், தன்னுடைய நண்பனுடைய பெயரையும், வெளியிடலாகா தெனவும் கூறுகிறான். இதில் ஏதாவது உண்மை யிராமற் போகாது. ஆதலால் மஹாராஜா, அப் பிரதிக்ஞை என்றைக்கு முடிவு பெறும் எனக் கேட் டறிந்து, அதன்பின் விசாரித்தலே நல

மெனத் தோற்றுகிறது. இப்பொழுது தாங்கள் சிக்ஷை விதித்தல் நியாய மல்ல.

ம. மஹாராஜா, அவ்வாறு ஒருகாலுஞ் செய்ய லாகாது. இவன் குற்றவாளி என்பதற்குச் சந்தேக மில்லை. இவன் தானுகை ராஜ குமாரத்தியை அபகரித்துச் சென்றிரா விட்டாலும், அப்படிச் செய்தவன் இன்னுனெனத் தனக்குத் தெரியுமெனக் கூறுகிறுன். ஆதலால் குற்றவாளியுடன் சம்பந்தப்பட்ட தப்பிதத்திற்கு இவன் உட்படுகிறுன். தான் பிரதிக்ஞை செய்திருப்பதாகக் கூறுவதெல்லாம் பொய்யே! சந்தேக மில்லை. இப்படியாவது சில நாள் கழியட்டும், அதற்குள்ளாக எப்படியாவது தப்பித்துக் கொள்ளலாமெனப் பார்க்கிறுன். ஆதலால் மஹாராஜா, இவனுக்கு உடனே தண்டனை விதித்ததே நலம்.

ச. [ஒரு புறமாக] ஐயோ! இன்னும் நான்கு மணி யாகவில்லையே!—மஹாராஜா, நான் அதிகமாகக் கேட்க வில்லை, இன்னும் அப் பிரதிக்ஞை முடிவு பெற சிறிது காலந்தானிருக்கிறது. அப்புறம் நான் எல்லாவற்றையும் வெளிப்படுத்துகிறேன், தாங்கள் அவசரப்படலாகாது. அவசரப்பட்டு ஏதாவது செய்வீரானுல் தாங்களே வருத்தப்பட வேண்டியதாக வரும்

வீ. அடே! என்ன சொன்னுய்? என்னை பயமுறுத்தப் பார்க்கிறுயோ?

ச. அப்படி யல்ல, மஹாராஜா! நான் கூறுவது உண்மையே! நான் இப்பொழுது உயி ரிழப்பே னுயின், பிறகு நீர் அதற்காக உயி ரிழக்க வேண்டியதாக வரும். ஆதலால் அவசரப்பட்டு சிக்ஷை செய்யவேண்டாம், இப்பொழுதே சொன்னேன்!

வீ. அடே! துஷ்டா! என்ன கூறினுய்! அற்பனுகிய நீ என்னை பயமுறுத்துகிறதா? இருக்கட்டும்! மந்திரி! இவன் குற்றவாளி என்பதற்குச் சந்தேகமே யில்லை. சேவகா!

இவ்வளவு அதனப்பிரசங்கியாகிய இவனை, என் கண் முன்பாகவே, நமது அரண்மனையின் முற்றத்தில், வெட்டிவிடு சீக்கிரம்! தாமதித்தால் இன்னும் அதிகமாகப் பேசுவான், சீக்கிரம்!

சு. மஹாராஜா! அவசரப்பட வேண்டாம்.

ச. ஐயோ! மஹாராஜா, நான் கேட்பதெல்லாம் இன்னும் ஐந்து நிமிஷந்தான்.

சே. அடே! பேசாதே! மூடு வாயை!

கோ. திறவாதே வாயை இனி!

[அவன் பேசுவதைத் தடுத்து தர்பாருக்கு முன்னால் உள்ள முற்றத்திற்கு இழுத்துக்கொண்டு வருகிறான்.]

கோ. சேவகா, பெரிய வாளை யெடுத்துவா, சீக்கிரம்!

ச. ஐயோ! இப்படியு மிருந்ததா என்னுடைய விதி! இன்னும் நான்கு மணியாகவில்லையே! நானின்னொனென வெளியிட லாகாது—இனி என்ன இருக்கிறது? நான் இறக்க வேண்டியதுதான். ஐயோ! நா னிறப்பதற்கு அஞ்சவில்லை. ஆயினும் என் காதலியின் கதி என்னவாகுமென்றே வருந்துகிறேன். அதுவுமன்றி, என் நண்பனும்—இவைகளைப்பற்றி இப்பொழுது யோசித்துப் பயனென்ன? நானினி உயிரோடிருக்கப் போகிறது சில நிமிஷங்களே. இனி இவ் வுலகத்தைப்பற்றி நான் கருதுவானேன்? சுவாமியை ஸ்தோத்திரஞ் செய்துகொண்டிருப்போம்!—

கோ. அடே! இங்கேவந்து உட்கார்ந்து தலை குனிந்துக்கொள்.

ச. ஆ! ஈசனே! நான் உம்மை எவ்வளவு நம்பி யிருந்தேன்! நீர் என்னை இத்தருணத்தில் இவ்வாறு கைவிடலாமோ? ஆயினும் என்ன? நீர் என்னைக் கைவிட்டபோதிலும் நானும்மை விடுவேனே? இனி உம்முடைய நாமத்தை

ஸ்மரித்துக்கொண்டே இறந்து உம்முடைய பாதத்தை வந்து சேர்கிறேன்.

[ஸ்தோத்திரம் செய்கிறான். அது முடிந்ததும் அவன் தலையை வெட்ட கொத்தவால் வாளை ஓங்குகிறான். அச்சமயம் அரண்மனை கோபுர மணி நான்கு அடிக்கிறது. உடனே சத்யவந்தன் எழுந்து கொத்தவாலின் கையைப் பிடித்துக் கொள்கிறான்.]

ச. வீரசேனராஜனே! வீரசேனராஜனே!

[வீரசேனராஜன் மந்திரிகள் முதலியோர் அக் கூச்சலைக்கேட்டு அவனிருக்குமிடம் விரைகின்றனர்.]

வீ. என்ன! என்ன!

ச. மஹாராஜா! இம் மோதிரத்தைப் பார்த்துவிட்டு அப்புறம் என்னைக் கொல்லும்படிக் கட்டளையிடும்.

வீ. கொத்தவால், சற்றே பொறு!—அப்பா! இந்த மோதிரம் உனக்கெப்படி கிடைத்தது? இது ஜெயந்த சக்ரவர்த்தியினுடையதாயிற்றே! அப்பா, நீ யார்? இப்பொழுதாவது உண்மையைக் கூறு?

ச. மஹாராஜா, இனி நான் கூறலாம். பிரதிக்ஞை செய்துகொண்ட காலம் கழிந்துவிட்டது. இம் மோதிரம் ஜெயந்த சக்ரவர்த்தி யுடையதே. ஜெயந்த சக்ரவர்த்தியின் குமாரராகிய அதிரூபரே உம்முடைய சுந்தரியை அழைத்துச் சென்றனர்! அவருடைய நண்பனாகிய சத்யவந்தனே உமது முன்பாக இப்பொழுது நிற்கும் நான்!

வீ. ஆ! ஆ! என்ன சொன்னாய்! என்ன சொன்னாய்! அதிரூபனா என்னுடைய குமாரத்தியை அழைத்துச் சென்றவன்? நீயா சத்யவந்தன்? ஆமாம்! இப்பொழுது எனக்கு நன்றாக ஞாபகம் வருகிறது? உன்னுடைய முகமானது எனக்கு முன்பே எங்கேயோ பார்த்ததுபோ லிருந்தது!

ஆ! சத்யவந்தா! நீ கூறுவது உண்மைதானே? எங்களுடைய சக்ரவர்த்தியின் குமாரனே சுந்தரியை அழைத்துச் சென்றான்?

ச. ஆமாம்.

வீ. அப்பா! சத்யவந்தா! அதிரூபன் என்னிடம் நேராக வந்து கேட்டிருக்க லாகாதா? அதிரூபன் சுந்தரியின் மீது காதல்கொண் டிருப்பதை அறிந்திருந்தால், தலையால் நடந்து வந்து சுந்தரியை அவனுக்குக் கொடுத்திருப்பேனே! ஐயோ! இவைகளை யெல்லாம் நீ முன்பே என்னிடம் கூறியிருக்க லாகாதா?

ச. வீரசேன ராஜனே, நாங்க ளென்ன செய்வோம்? நாங்கள் செய்த பிரதிக்ஞையி னின்றும் தவறுவது நியாயமல்லவே!

வீ. ஆ! சத்யவந்தா! நான் உன்னை அறியாது செய்த பிழைகளை யெல்லாம் மன்னிப்பாய். ஐயோ! நான் உங்களை யறியாது அதிரூபனுக்கும் உனக்கும் என்ன தீங்குகள் விளைத்தேன்! இப்பொழுது அதிரூபனும் சுந்தரியும் எங்கிருக்கிறார்கள் தெரியுமா?

ச. மஹாராஜா! எனக்குத் தெரியாது, எங்கே போயிருக்கப் போகிறார்கள்? அந்த யுத்தத்தில் மாண்டிராவிட்டால் விதர்ப்ப தேசத்திற்குத்தான் போயிருப்பார்கள்.

ஒரு தூதன் ஒரு நிருபத்துடன் விரைந்து வருகிறான்.

சே. மஹாராஜா! போற்றி! ஜெயந்த சக்ரவர்த்தி இதை உம்மிடங் கொடுத்து சீக்கிரம் உத்தரம் வாங்கிக்கொண்டு வரச் சொன்னார்.

வீ. ஐயோ! என்ன எழுதி யிருக்கிறாரோ?—மந்திரி, நான் என்ன செய்வது? இதோ நிற்கும் சத்யவந்தன் கூறியதெல்லாம் உண்மையே! அதிரூபன் சுந்தரியை அழைத்துச் சென்றவன் என்பதற்குச் சந்தேக மில்லை. ஆயி

னும் அதிரூபனை விதர்ப்ப தேசத்தில் காணுது தேடு கிருர்களாம்! அதிரூபன் ஒருவேளை அந்த யுத்தத்தில் இறந்தானே? அல்லது இப்பொழுது எங்கேயாவது அலைந்து திரிகிருனே? நமது சக்ரவர்த்தி எப்படியாவது அதிரூபன் எங்கிருக்கிருனென்று அறிந்து கூடிய சீக்கிரத்தில் எழுதும்படி கட்டளையிட் டிருக்கிருர். அவருக்கு நடந்த விஷயங்களை யெல்லாம் தெரிவித்தால் மிகவுங் கோபங் கொள்ளுவாரே! அவருக்கு நான் என்ன எழுதுவது?

சு. மஹாராஜா, நடந்த விஷயங்களை யெல்லாம் ஒன்றும் ஒளியாது ஜெயந்த சக்ரவர்த்திக்குத் தெரிவிப்பதே முறைமை. அதுவுமன்றி, நாமெல்லோரும் தங்களுடைய குமாரத்தியும் மருமகனும் எங்கிருக்கிருர்கள் என்று தேடி அறியவேண்டுமென்று எனக்குத் தோற்றுகிறது. மஹாராஜா, இதில் ஏதோ விசேஷ மிருக்கவேண்டுமென்று நான் முன்பே கூறினேனே. இனி யோசிப்பதிற் பயனென்ன? உடனே புறப்படுவோம்.

வீ. சுவிசாரி, அப்படியே செய்வோம். இனி ஒரு க்ஷணமும் தாமதிக்க லாகாது. இப்பொழுதே புறப்படுவோம் வாருங்கள். சத்யவந்தா, நீயும் எங்களுடன் தேட வருகிருயா என்ன?

ச. அப்படியே, ஐயனே, இதோ வந்துவிட்டேன். எனக்குக் கொஞ்சம் வேலை யிருக்கிறது. நீங்களெல்லோரும் புறப்படுங்கள். அவ் வேலையை முடித்துக்கொண்டு இதோ வந்துவிட்டேன். [ஒரு புறமாக] நான் சாகரிகையிடஞ் சென்று அழைத்துச் செல்ல வேண்டும்.

[எல்லோரும் போகிருர்கள்.]

காட்சி முடிகிறது.

## ஐந்தாம் காட்சி

இடம்—காட்டில் ஓர் வெளி நிலம்.

ஜெயந்தன், வசுமதி, லலிதை, முதலியோர் தங்கியிருக்கின்றனர்.

**விதூஷகன்** ஒரு புறமாக நிற்கிறான்.

பரிவாரங்கள் சூழ்ந்து நிற்கின்றனர்.

ஜெ. ஆ! நாம் எல்லாவிடங்களிலும் தேடியாய் விட்டது. இன்னும் மிகுதியானது அதோ தோன்றும் படியான காடு ஒன்றே! அதை நாளைத்தினம் பார்க்கவேண்டும். அதிலும் இல்லாவிட்டால் நாம் என்ன செய்வது? இவர்களிருவரும் எங்கே போயிருப்பார்கள்?

வ. ஒரு வேளை விதூஷகர் சொல்லுகிறபடி தேச சஞ்சாரஞ் செய்துகொண் டிருந்தாலு மிருப்பார்கள். அந்தந்த தேசத்து மஹாராஜாக்களுக் கெல்லாம் விசாரிக்கும்படி யெழுதுகிறது தானே?

ஜெ. நான் முன்பே எழுதி யிருக்கிறேன், ஆயினும் உத்தரம் மாத்திரம் இன்னும் அநேக யிடங்களி லிருந்து வரயில்லை.

வ. ஆயினும் எனக்குச் சந்தேகமாகவே யிருக்கிறது. காட்டிலுள்ள துஷ்ட மிருகங்களால் அதிரூபனுக்கு ஏதோ துன்பம் நேரிட்டிருக்கவேண்டும் என்பதற்குச் சந்தேகமில்லை. நான் நாளைத்தினம் சூரியன் அஸ்தமிப்பதற்கு முன் என் குழந்தையைக் காணாவிட்டால் நான் செய்து கொண்ட சபதத்தின்படி தீயில் வீழ்ந் திறக்கப் போகிறேன்!

வி. அம்மா, அவ்வாறு செய்யவேண்டாம். நான் ஜ்யோதிஷம் பார்த்தேன்; தாங்கள் இளவரசரை நாளைக்குக் காண்பீரென்று எனக்குத் தெரியவந்தது. நான் சொல்லுவது பொய்யாமா? அரிச்சந்திரனுக்குப் பிற்பாடு பொய்

பேச சுவாமி என்னைத்தானே பிறப்பித்தார்!— அது யாரது, எவனோ ஓடி வருகிறானே!

ஒரு தூதன் ஓடி வருகிறான்.

அப்பா! கொஞ்சம் நில் ஏன் ஓடுகிறாய்? கடன்காரன் துரத்திக்கொண்டு வருகிறானா என்ன?

[அவனைப் பிடித்துக் கொள்ளுகிறான்.]

சே. விடுமையா! விடுமையா! நான் சீக்கிரம் விதர்ப்ப தேசத்திற்குப் போகவேண்டும்!

வி. இரு அப்பா! பொறு! அவசரப்படாதே! விதர்ப்ப தேசத்தில் என்ன வேலை உனக்கு?

சே. மஹாராஜாவுக்கு முக்கியமான நிருபம் ஒன்று எடுத்துக்கொண்டு போகிறேன்! விடுமையா!

ஜே. என்ன! என்ன நிருபம்? யாரிடமிருந்து?

வி. பயித்தியக்காரா! எங்கே ஓடுகிறாய்? அதோ யிருக்கிறார் மஹாராஜா, கொடு நிருபத்தை.

சே. இவரா!—மஹாராஜா, மன்னிக்கவேண்டும். வீரசேன ராஜன் உம்மிடம் இந் நிருபத்தை கொடுத்துவிட்டு வரச் சொன்னார்.

ஜே. என்ன நிருபம் இது? [அதை படித்துப் பார்க்கிறான்.]

வ. பிராணநாதா, என்ன சமாசாரம்? நம்முடைய அதிரூபனைப்பற்றி ஏதாவது எழுதி யிருக்கிறாரோ?

ஜே. ஓ! நமது விதூஷகர் கூறியதே உண்மையானாற் போலிருக்கிறதே!

வி. என்ன! என்ன! மஹாராஜா?

ஜே. வசுமதி, அதிரூபனும் சத்யவந்தனும் காட்டிலே வேட்டை யாடியபொழுது, வழி தெரியாது வீரசேன மஹாராஜனுடைய பட்டணத்தைச் சேர்ந்து, அங்கே தாங்கள் ஒரு காரணம் பற்றி இன்னொன்று ஒருவருடனும்

ஒரு மாதம் வரையில் தெரிவிக்கலாகாதென்று பிரதிக்ஞை செய்து கொண்டார்களாம். பிறகு அகஸ்மாத்தாய் அதிரூபன் சுந்தரியைக் கண்டு காதல் கொண்டானும்; அதிரூபனை இன்னானென்று அறியாமல் வீரசேன மஹாராஜன் சுந்தரியைக் கடிந்துகொண்டு சிறையிலிட, அதிரூபன் எப்படியோ சுந்தரியைச் சிறையினின்றும் தப்ப வைத்து அழைத்துச் சென்றானும். பின்பு வீரசேனன் தனது பரிவாரங்களைப் பின் தொடரச் செய்ய அவர்கள் சென்று சத்யவந்தனை அதிரூபனெனக் கருதி பிடித்துச் சென்றார்களாம். பின்பு சத்யவந்தன் ஒரு மாத காலமானபின் இவ் விஷயங்களை யெல்லாம் எடுத்துக் கூறி, சுந்தரியை மணந்தவன் அதிரூபனென்று மெய்ப்பித்ததாகவும், ஆயினும் அதிரூபனும் சுந்தரியும் தற்காலத்திலிருக்கும் இடம் தனக்குத் தெரியாதென்றும், அவர்களைத் தேடத் தானும் தனது பரிவாரங்களுடன் புறப்பட்டிருப்பதாகவும், வீரசேன மஹாராஜன் எழுதி யிருக்கிறான்—என்ன ஆச்சரியம் பார்த்தாயா? நா மொன்று நினைக்க நடந்தது வேறொன்றாக இருக்கிறதே!

வி. நான் முன்னமே சொன்னேனே! சாதாரணமாக ராஜகுமாரர்களைக் காணோமென்றால் எங்கே போயிருப்பார்கள்? வேறொரு தேசத்திற்கு. அங்கே போவானேன்? அங்கேயிருக்கும் ராஜகுமாரத்தியை கலியாணம் பண்ணிக்கொள்ள! இது தெரிந்த விஷயந்தானே!

வ. அந்தமட்டும் சந்தோஷந்தான்! ஆயினும் இப்பொழுது அதிரூபன் எங்கே அலைந்துகொண் டிருக்கிறானோ?

ல. மஹாராஜா, சத்யவந்தன் இப்பொழுது எங்கே யிருக்கிறானம்?

ஜே. சத்யவந்தன் தானும் அதிரூபனைத் தேடப் போயிருக்கிறானம்.

ஓர் சேவகன் வருகிறான்.

சே. மஹாராஜா! வீரசேனராஜன் தனது பரிவாரங்களுடன் உம்மைக் காண வருகிறார்.

ஜே. ஓஹோ! அவரும் இங்கேயே தேட வந்தாற்போ லிருக்கிறது!

வீரசேனன், மித்திராவசு முதலியோர் பரிவாரங்களுடன் வருகின்றனர்.

வீ. சக்ரவர்த்தியே! நான் தெரியாது செய்த பிழையை மன்னிக்கவேண்டும் நான் அதிரூபனை இன்னானென்று அறியாதபடியினா லல்லவோ இவ்வளவு கஷ்டம் நேரிட்டிருக்கிறது. அதிரூபன் என் பெண்ணை விவாகஞ் செய்துகொள்ள வேண்டுமென்று தவஞ் செய்திருந்தேனே!

ஜே. அதிரூபனை அறியாதது உம்முடைய தப்பல்லவே, அதற்கு நாம் என்ன செய்யலாம்?

வீ. ஆயினும் என்னுடைய குமாரத்தியையும் மருமகனையும் கண்டுபிடித்தா லொழிய நான் என் பட்டணத்திற்குத் திரும்புகிறதில்லை யென்று தீர்மானித்திருக்கிறேன்.

ஜே. இன்றைக்கு இனிமேல் நா மெங்கே தேடுவது? பொழுது போய்விட்டதே. நீர் சற்று இளைப்பாறி இரும். நாளைத்தினம் தேடுவோம்.

வீ. அப்படியே செய்வோம் [எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

## ஆறும் காட்சி

இடம்—ஓர் காடு.

அதிநுபன் சுந்தரியைத் தாங்கிக்கொண்டு வருகிறான்.

சு. பிராணநாதா! இனி என்னால் ஒரு அடியும் எடுத்து வைக்க முடியாது. என் மனமெல்லாம் சுழல்கிறது; இவ்விடத்தைவிட்டு நான் பெயரேன். [பூமியில் சாய்கிறாள்.] பிராணநாதா! எனது அந்திய காலம் வந்துவிட்டாற் போல் காண்கிறது! ஐயோ! என்னைப் பார்க்கிலும் துர்ப் பாக்கியசாலிகளுண்டா! என்னை மணம் புரிந்த நீர் ஜெயந்த சக்ரவர்த்தியின் குமாரனென அறிந்தும், அந் நலத்தை அநுபவிக்கக் கொடுத்துவைக்காமற் போனே னே! ஐயோ! பிதா இவ் வுண்மையை யறிந்தால் தனது கோபமெல்லாம் மாறி, எவ்வளவு சந்தோஷங் கொள் வார்! ஆ! பிராணநாதா! இதை நீர் முன்பே கூறி யிருக்க லாகாதா?

அ. கண்ணே, நான் சற்று முன்பாகக் கூறியதை மறந்து விட் டாயோ? நாங்கள் செய்துகொண்ட பிரதிக்ஞை சற்று முன்பாகத்தான் முடிந்தது. அதற்குள்ளாக எங்க ளுடைய பெயரை வெளியிடுவதெப்படி? நாங்கள் பிரதிக்ஞை செய்துகொண்டபொழுது இம்மாதிரியான விபரீதங்களெல்லாம் வருமென்று எண்ணினேமா என்ன?

சு. ஆம்! ஆம்! நான் அதை மறந்து விட்டேன். என்னை மன் னிக்கவேண்டும்—அதிருக்கட்டும், நா மிப்பொழுது என்ன செய்வது?

அ. கண்மணியே, நீ சற்று இளைப்பாறி, உன் தேகத் தளர்ச்சி சிறிது நீங்கினவுடன், அதோ இக் காட்டை விட்டுச் செல்ல ஒரு வழி தோன்றுகிறாற்போலிருக்கிறது அவ் வழியாகச் சென்று இக் காட்டைக் கடந்து, பிறகு

என் பிதா நகரத்திற்காவது, அல்லது உன் பிதா நகரத்திற்காவது எது அருகாமையி லிருக்கிறதோ, அதற்கு வழி யறிந்து போய்ச் சேர்வோம். இனி நான் இன்னுனென்று வெளியிடலா மல்லவா ?

சு. ஆம்! பிராணநாதா, ஆயினும் நாம் அப்படிச் செய்தல் மிகவுங் கடினம். இதுதான் இக் காட்டைக் கடந்து செல்ல வழியென்று நாம் இதுவரையில் எத்தனை தரம் ஏமாந்தோம்! அதுவுமன்றி எனக்கோ எழுந்திருக்கவும் சக்தி யில்லை. நான் இவ்விடத்திற்றுனே இறக்க வேண்டுமோ என்னவோ வென்று தோற்றுகிறது!— பிராணநாதா, எனக்கு மிகவுந் தாக விடாயாக விருக்கிறது. சீக்கிரத்தில் நான் குடிக்கத் தண்ணீர் வேண்டும்.

அ. சுந்தரி, வருந்தவேண்டாம். இங்குதானே நீ ஜாக்கிரதையாக இரு; நான் இதோ சென்று ஒரு நிமிஷத்தில் தண்ணீர் கொண்டு வருகிறேன். [விரைந்து போகிறான்.]

சு. ஆ! என்னுடைய துர்பாக்கியமே! துர்பாக்கியம்! நான் எனது காதலர் அதிரூபரென்று முன்பே அறியாமற் போனேனே! ஆ! இந்த சமயத்தில் சாகரிகை என தருகிலிருப்பா ளானால் எனக்கு எவ்வளவு வுதவியா யிருப்பாள்?—என்ன, இன்னும் தண்ணீருக்குப் போனவர் திரும்பி வரவில்லை? ஐயோ என் நாவெல்லாம் உலருகிறதே! என் மனமும் சுழல்கிறது! ஒஹோ! என்னுடைய முடிவு காலம் நெருங்கிவிட்டாற்போ லிருக்கிறது! ஐயோ! இந்த காலத்தில் எனது பிராணநாதர் என்னருகி லில்லாமற் போயினரே! அவர் திரும்பி வருவதற்குமுன் நான் இறந்துவிட்டால் என்ன செய்வது? ஐயோ! அவரைக் கண்டு வார்த்தையாடி பின்பிறக்கலாகாதா? நான் இறந்த பின் அவர் இங்கு வருவாரானல் அவர் எவ்வளவு துக்கப்படுவார்? பிராணநாதா! பிராணநாதா! அப்பொழுது உமக்கு யார் தேறுதல் சொல்லப் போகிறீர்கள்? ஆ! மாமரத்தில் வாழுங்குயிலே! தோகை விரித்

தாடும் மயிலே! அன்னப் பறவையே! வெருண்டோடும் மானே! மற்றுமுள்ள வன விலங்குகளே! நான் இறந்த பின் என் காதலர் இங்கு வருவாராயின் அவருடைய நாமத்தை ஸ்மரித்துக்கொண்டே நா னிறந்ததாகக் கூறி, அவருக்குத் தேறுதல் சொல்வீர்களா!—ஆ! ஆ! பிராண நாதா! [மூர்ச்சையாகிருள்.]

அ. [உள்ளே] இதோ வந்துவிட்டேன்! இதோ வந்துவிட்டேன்!

அதிருபன் மறுபடி வருகிருன்.

அ. இதோ கொண்டு வந்துவிட்டேன். கண்ணே!—ஆ! என்ன ஆச்சரியம்!—சுந்தரி தாக விடாயால் மூர்ச்சையாயினளா என்ன? சுந்தரி! சுந்தரி! ஆ! என்ன பேச்சு மூச்சு ஒன்றையுங் காணேமே!—ஓஹோ! சுந்தரி நான் ஜலங்கொண்டு வருவதன் முன் தாகவிடாயால் இறந்துவிட்டாள்!—ஐயோ! இறந்து விட்டாள் என் காதலி! கண்ணே! கண்ணே! இது உனக்கு அடுக்குமோ! இதுவும் நியாயந்தானே? அப் பாபி யமன் நான் வருமுன் உன துயிரைக் கொண்டு சென்றுனே! நீ இறக்கும் பொழுது என்னை நினைத்தாயோ? சீக்கிரம் ஜலங்கொண்டு வரவில்லை யென்று என்னைப் பழித்தாயோ? கண்ணே கண்ணே! இதோ ஜலங்கொண்டு வந்திருக்கிறேன், இதை நீ என்மீது கருணை புரிந்து அருந்தலாகாதோ? ஐயோ! நான் இங்கு வருந்தி அழுகிறேனே! எனக்குத் தேறுதலாக ஒரு வார்த்தையாவது நீ கூறலாகாதா? கண்ணே! என் கற்கண்டே! கனிரசமே! என் காதற் கிளியே! என தாசைக் கற்பகமே! என்னை நீ மறந்தாயோ? சுந்தரி! சுந்தரி! நான் உன்னை மறுபடியும் எந்த ஜன்மத்திலே காணப் போகிறேனடி? என் கண்மணியே! கண்மணியே! இதுவோ உனக்கு விதித்தவிதி!—ஆ! சுந்தரி!—சரி—நான் இனி எவ்வளவு அழுதும் பயனென்ன? சுந்தரி சென்ற இடத்திற்கு நானும் செல்லுகிறேன். கண்ணே!

பயப்படவேண்டாம் இதோ உனக்குத் துணையாக நான் வருகிறேன்.

[சத்யவந்தன் உள்ளிருந்து ஆ! நண்பனே! நண்பனே! என்று கூவுகிறான்.]

ஆ! அது என் சத்யவந்தனுடைய குரலா?—சீ! மனப் பிரமை! சத்யவந்தன் இங் கெங்கு வரப் போகிறான்? அவனும் சுந்தரி சென்ற இடத்திற்கே சென்றிருக்கிறா னென்பதற்குத் தடை யில்லை.

[சத்யவந்தன் உள்ளிருந்து "நண் பனே! நண்பனே!"]

இதென்ன! அவன் குரல்போ லிருக்கிறதே! இல்லை இல்லை, காற்றில் இலைகள் அசைகிற சப்தம் அம்மாதிரியா கக் கேட்கிறது.—நான் இனி தாமதிப்பானேன்? உடை வாளே! வெளியில் வருவாய். ஈசனே! நான் சுந்தரியின் மீது கொண்ட காதல் உண்மையான காதலானால், நான்—

[தற்கொலை புரிய கட்கத்தை ஓங்குகிறான். அச்சமயம் சத்ய வந்தன் ஓடிவந்து அதைத்தடுத் து அவனிடமிருந்து கட்கத்தை பிடுங்கிக் கொள்கிறான். சாக ரிகை ஓடிவந்து சுந்தரிக்கு சைத்யோபசாரம் செய்கிறாள்.]

ச. ஐயனே! என்ன ஆச்சரியம்! என்ன காரியஞ் செய்யத் துணிந்தீர்?

அ. சத்யவந்தா! என் கையை விடு, நான் எதற்காக இவ் வளவு துயரமும் உழன்றேனோ, அதை நான் இனி பெறப் போகிறதில்லை. நான் இனி இருந்தென்ன இறந் தென்ன? சுந்தரி அதோ இறந்து கிடக்கிறாள்!

ச. ஆ! ஆ! அப்படியா?

சா. அரசே! இல்லை! இல்லை! இல்லை! சுந்தரி இறக்கவில்லை! இதோ மூச்சு வருகிறதே!

ச. ஆமாம்! ஐயனே! இதோ காலசைகிறது பாரும்.

அ. அப்படியா! ஏதோ? ஏதோ? இத் தண்ணீரைக் குடிக்கச் செய், சாகரிகா,—தாக விடாயால் முன்பு மூர்ச்சையா யிருக்கவேண்டும்.

ச. அரசே, பிதா இதோ வருகிருர்!

[ஜெயந்தன், வசுமதி, வீரசேனன், மித்திரவசு, விதூஷகன், வீர மார்த்தாண்டன், பரிவாரங்கள் சூழ வருகின்றனர். ஜெயந்தன் அதிரூபனைக் கட்டி யணைக்கிருன். வசுமதி பிறகு அவனைக் கட்டியணைக்கிருள். வீரசேனன் சுந்தரியைக் கட்டி யணைக்கிருன்.]

வ. அதிரூபா! அதிரூபா! நான் உன்னை மறுபடியும் காணக் கிடைத்ததே! இன்று நான் உன்னை மறுபடியும் பெற்றெடுத்தேன்! கண்ணே! உனக்கு இத்தனை நாள் என்னைப் பிரிந்திருக்க எப்படி மனம் வந்ததோ? பிராண நாதா, எல்லாம் சுபமாகவே முடிந்தது! இதோ நமக்கொரு மருமகளும் வாய்த்தாள்—சுந்தரி, என் னருகில் வா, ஏன் அஞ்சுகிருய்?

ஜெ. ஆ! சத்யவந்தா! என்னிடம் என்ன கூறிச் சென்றுய்? இது தானே கூடிய சீக்கிரத்தில் பட்டணம் வந்து சேர்வது? அதிருக்கட்டும், அதிரூபா, நீங்கள் வேட்டையாடப் போனது முதல் இதுவரையில் நடந்த செய்திகளை எனக்கு விவரமாய்க் கூறுவாய். வீரசேன மஹாராஜன் சில விஷயங்களை எனக்குத் தெரியப் படுத்தி யிருந்த போதிலும் உங்கள் வாயினல் எல்லாவற்றையும் கேட்க விரும்புகிறேன்.

அ. ஐயனே, இவ் விஷயங்களை யெல்லாம் சரியாக எடுத்துக் கூறத்தக்கவன் சத்யவந்தனே!—சத்யவந்தா, என்னை விட்டு நீ பிரிந்தவுடன், உனக்கு நேரிட்ட விஷயங்களை யெல்லாம் நானும் அறிய ஆவலா யிருக்கிறேன். ஆதலால் எல்லாவற்றையும் ஆதியோடந்தமாகக் கூறுவாய்.

ச. அப்படியே,—மஹாராஜா, தங்களிடம் விடை பெற்று வேட்டைக்குச் சென்றபொழுது, வனத்தில் ஓர் பெரும் பன்றி புறப்பட, அதைத் துரத்திக்கொண்டு நாங்களிருவரும் நெடுந்தூரஞ் சென்று ஓர் பூஞ்சோலையை அடைந்தோம். அங்கு நாங்கள் சற்று இளைப்பாறிக்கொண்டிருக்கும்பொழுது, எங்களிருவரும் ஓர் வாக்குவாதமுண்டாக, அதன் மீது ஒரு மாதம் வரையில் என்ன நேர்ந்தபோதிலும் இன்னொன்று வெளியிடலாகாதென்று ஓர் பிரதிக்ஞை செய்துகொண்டோம். பிறகு நான் தண்ணீருக்காகச் செல்ல, சுந்தரி அங்கு வந்து, அவர் உறங்கும்பொழுது அதிரூபரைக் கண்டு காதல் கொண்டு, தன் மோதிரத்தை அவர் கையில் இட்டுச் சென்றாள். நான் திரும்பி வந்தபொழுது, என் நண்பர் எப்படியாவது தன் விரலிலிருந்த மோதிரத்தில் வெட்டப்பட்ட சுந்தரியென்னும் பெயருடைய ஸ்திரி யாரென்று அறியாது நம்முடைய ஊருக்குத் திரும்பலாகாதெனப் பிடிவாதமாகக் கூறினர். ஒரு கால் நீர் வினவின், தான் பலவந்தப்படுத்தினதாகக் கூறும்படி கட்டளை யிட்டார். அதற்கும் நானிசையாத பொழுது என்மீது கோபங் கொண்டு வேண்டுமாயின் நீ மாத்திரந் தனியாகச் செல், என்று கூறினர். மஹாராஜா, நான் அவரைத் தனியாக விட்டு வர மனமின்றி அவருடனே யிருக்க நிச்சயித்தேன். அதுவுமன்றி, அவரை யழைத்து வராது நான் மாத்திரம் திரும்புவதில் பயனில்லையெனக் கருதி அங்கே நின்று விட்டேன். பிறகு ஒரு புரோகிதர் உதவியால், சுந்தரி வீரசேனராஜன் புதல்வியெனக் கண்டறிந்தோம். அதன் மேல் அதிரூபர் சுந்தரியை ஒருவரு மறியாதபடி காண வேண்டுமென்று கூற, நான் முன்பு தண்ணீருக்காகப் போனவிடத்தில் கண்டு காதல்கொண்ட சுந்தரியின் தோழியாகிய இதோ நிற்கும் சாகரிகையைக் கொண்டு அதிரூபர் சுந்தரியைக் காணும்படி செய்வித்தேன். இவ் விஷயம் வீரசேன ராஜனுக்கு மித்திரவசு மூலமாகத்

தெரியவர, அவர் அதிரூபர் இன்னாரென் றறியாது, யாரோ ஒரு அற்பனெனக் கருதி, ஊரெங்குந் தேடும்படி கட்டளை யிட்டார். அப்பொழுது சாகரிகையின் உதவியால் மித்திரவசுவை நான் சன்யாசி வேடம் பூண்டிருந்து ஓர் கோணிப் பையில் அடைப்பித்தேன்.

வீ. ஆ! ஆ! அப்படியா சமாசாரம்!—ஆ! சாகரிகா!

ய. ஆ! திருட்டு சன்னியாசி!

வி. ஏனையா? கோணிப் பையில் அடைக்கப்படும்படியான பாக்கியம் வரவேண்டுமே! எல்லோருக்கும் நேரிடுமா அது?

ச. பிறகு, வீரசேனராஜன் மிகவுங் கோபங்கொண்டு சுந்தரியை அவருடைய காதலன் யாரென்று வினவ, சுந்தரி தானும் அதிரூபர் இன்னாரென்று அறியாமையால், உண்மையாகவே தனக்குத் தெரியாது எனக் கூறியபொழுது, சினம் மூண்டு சுந்தரியைச் சிறையி லடைப்பித்து, மறுநாள் உதயம் சுந்தரியை மித்திரவசுவுக்கு விவாகஞ் செய்து கொடுக்கத் தீர்மானித்துவிட்டார். இவ் விஷயம் நான் சாகரிகையின் மூலமாக அறிந்தேன். பின்பு எனது நண்பருக்கு நான் ஓர் யுக்தி சொல்ல அதன்படியே அவர் மாறு வேடம் பூண்டு சுந்தரியைச் சிறையி னின்றும் அன்றிரவே மீட்பித்தார். அதன் பின் நாங்கள் நால்வருமாக அன்றிரவே அவ்வூரை விட்டு நமதூருக்குத் திரும்பினோம்; அப்பொழுது ஒரு காட்டின் வழியாக வரும் பொழுது, வீரசேன ராஜனால் எங்களைப் பிடித்துக் கொண்டு வரும்படி கட்டளையிட் டனுப்பப்பட்ட சைனியங்கள், எம்மை எதிர்க்க, அங்கு நடந்த யுத்தத்தில் நான் மூர்ச்சையாக, நான் தான் சுந்தரியின் காதலனென்று எண்ணி, என்னைச் சேவகர்கள் பிடித்துச் சென்று சிறையிலிட்டார்கள். பிறகு நான் இவரால் தலை யிழக்கும்படி விதிக்கப்பட்டது, அத் தண்டனையி னின்றும் நான் தப்பியது, முதலான விஷயங்களை யெல்லாம் வீரசேன

ராஜனே உமக்கு எழுதி யிருக்கிறுர். கடைசியாக நான் அதிரூபரையும் சுந்தரியையும் தேடிக்கொண்டு இவ் வழியாக வரும்போது, தாக விடாயால் மூர்ச்சையான சுந்தரி உயிர் நீங்கினளென எண்ணி, அதிரூபர் தனது உயிரை மாய்த்துக் கொள்ளப் பிரயத்தனஞ் செய்தபொழுது, தெய்வ கடாக்ஷத்தால் நான் இவரைக் கண்டு அதனைத் தடுத்தேன். சுந்தரியும் சைத்தியோபசாரஞ் செய்ய மூர்ச்சை தெளிந்தனள். உடனே நீங்கள் எல்லோரும் வந்தீர்கள். மஹாராஜா, இவ்வளவே நடந்த விர்த்தாந்தம்.

அ　தந்தையே, சத்யவந்தன் இன்னும் ஒரு க்ஷணம் தாமதித்து வந்திருப்பானுயின் நான் எனதுயிரை மாய்த்துக் கொண் டிருப்பேன். நான் சுந்தரியைப் பெற்றதும், கடைசியில் எனதுயிர் நிலைத்ததும், அவனது உதவியினுலேயே!

ச.　மஹாராஜா, நாங்க ளிருவரும் கூடிய சீக்கிரத்தில் வேட்டை யாடி வருவதாக வாக்களித்து இத்தனை காலம் தாமதித்தது பெருந் தவறே. அதுவு மன்றி நான் இளவரசரை எப்படியும் சீக்கிரம் அழைத்து வருகிறேனென்று தங்களுக்குக் கூறியபடி செய்யாதது, அதினும் பெரிய தவறும். ஆதலால் தாங்கள் என்ன தண்டனை விதிக்கிறீர்களோ அதனைப் பெற்றுக்கொள்ளச் சித்தமாயிருக்கிறேன்.

அ.　மஹாராஜா, நான் செய்ததும் தப்பிதமேயாம், என்னைத் தாங்கள் மன்னிக்கவேண்டும்.

ஜே　உங்களிருவரையும் நான் மன்னிக்கவே மாட்டேன். உங்களுக்கு இனி இவ்வாறு ஊரூராகச் சுற்றுவண்ணம் தகுந்த சிக்ஷை செய்யவேண்டும்! உங்களுக்கு நீக்கக் கூடாத விலங்குகளைப் பூட்டுவே னுயின் இனி இவ்வாறு செய்யமாட்டீர்கள். எங்கே விலங்குகள்? அம்மா,

சுந்தரி, இங்கே வா, சாகரிகா நீயும் வா.

[சுந்தரியின் கரத்தை அதிரூபன் கரத்திலும், சாகரிகையின் கரத்தை சத்யவந்தன் கரத்திலும் வைத்து]

அதிரூபா, சத்யவந்தா. இனி இவ்வாறான தப்பிதஞ் செய்யமாட்டீர்களல்லவா? நீங்களிருவரும் நீடூழி காலம் உங்கள் மனைவிகளுடன் வாழ்வீர்களாக!

வி. மஹாராஜா, தப்பிதஞ் செய்வோருக்கெல்லாம் இவ்வாறான தண்டனை தாங்கள் விதித்தால், அப்புறம் இந்த உலகத்தில் எல்லோரும் குற்றவாளிகளாக விரும்புவார்களே சரி, சம்சார விலங் கென்றால் இலேசான விலங்கா என்ன? அதையும் அனுபவித்தவர்களுக்கல்லவோ தெரியும் அதன் கஷ்டம்!

வ. பிராணநாதா, அதிரூபனுக்கும் சத்யவந்தனுக்கும், க்ஷத்ரிய தர்மப்படி விவாகம் நடந்திருந்தபோதிலும், நாமெல்லோருங் கண்டு களிக்கும்படி எல்லாத் தேசத் தரசர்களையும் வரவழைத்து மிகவும் வைபவத்துடன் விவாகஞ் செய்விக்கவேண்டும்.

வீ. சக்ரவர்த்தியே, என்னுடைய கோரிக்கையும் அதுவே!

ஜெ. அப்படியே செய்விப்போம்.—எல்லாம் சுபமாகவே முடிந்தது!—அப்பா, சத்யவந்தா, உன் நண்பனுக்கு இவ்வளவு உபகாரஞ் செய்து, முடிவில் அவனது உயிரைக் காப்பாற்றிய உனக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்? [எல்லோரும் போகிறார்கள்.]

2566 காட்சி முடிகிறது.

---

நாடகம் முற்றியது.

Printed by Dowden & Co., at the "Peerless Press," Madras.